The Viveka Chintamani Series.

# STORY OF COLBERT

## The Draper's Apprentice who became Prime Minister of France.

BY

C. V. SWAMINATHA AIYAR

(Reprinted from the Viveka Chintamani.)



# கோல்பெர்ட் சரித்திரம்;

துணிவியாபாரி கடையிலிருந்து முதல் மந்திரி ஸ்தானத்துக்குவந்த ஒரு வாலிபன் கதை.

இஃது

ஸி. வி. சுவாமிநாத அய்யர் அவர்களால் இயற்றப்பட்டு

"விவேகசிந்தாமணி" யிலிருந்து திருத்தி அச்சிடப்பட்டது.

MADRAS:
PUBLISHED BY
C. V. SWAMINATHA AIYAR,
SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY, TRIPLICANE.
1897.

# EDITOR'S PRESACE.

## விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்.



### முகவுரை

தமிழ்ப்பாஷை சிறந்ததும் இனியதுமென்று அப்பாஷாபண்டிதர்கள் அதைப்பற்றிப் பேசுங்கால் பெருமை கொண்டாடினும், அப்பாஷைப் பயிற்சி தற்காலம் தமிழைச் சுயபாஷையாக வுடையாருள்ளும் விர்த்தியடையாமல் க்ஷீணித்துவருகிற விஷயம் யாவரும் அறிந்ததேயாம். யாவரும் அறிந்தும் அப்பாஷையை அநாதரவு செய்வது பிசகென்று பல்லோர் கூறியும், அதை யாதரித்து அப்பாஷையின் பயிற்சியை விர்த்திசெய்யவும், அதன்மூலமாக உபயோகமான அறிவைச் சனங்களுக்குள் பரவச்செய்யவும், பலர் ஒன்று சேர்ந்து பெருமுயற்சி செய்து பயன் விளைவித்ததைக்காணோம்.

தற்காலம், உபயோகமானதும் ஊதியமளிப்பதுமான அறிவு, பெரும்பாலும் ஆங்கிலேய பாஷை மூலமாகவே பெறுவது எளிதாக விருக்கிறது. ஆகையால் இங்கிலீஷ படித்தவர்கள் அப்பாஷையிலுள்ள புஸ்தகங்களையே மேன்மேலும் வாசிக்கப் பிரியம் கொண்டவர்களாகிறார்கள். தமிழ்ப்பாஷைப் பயிற்சி பலவிதத்திலும் அசட்டை செய்துவிடப்பட்டதால், அப்பாஷையில் அவர்களுக்குச் சாதாரணமாய்த் தேர்ச்சியின்றிப் போய்விட்டது. இங்கிலீஷ் படிக்காத ஜனங்களுக்கு நித்தியப்படி ஜீவனத்திற் குபயோகமான அறிவு பலவகையில் வேண்டிய தவசியமாயிருந்தும, சுயபாஷையில் அவர்கள் தாமாக வாசித்துக் கிரகிக்கத்தக்க உபயோகமான புஸ்தகங்கள் அதிகமின்மையால், அவர்கள் அறிவையடைய

ஆவல்கொண்டும் ஏற்ற வழியின்றித் தவித்துச் சும்மா இருந்துவிடுகிறார்கள். இப்படித் திராப்பொறியாசச் சும்மாவிருக்கவேண்டி நேரிடுவது வழக்க பலத்தால் சோம்பர்தனமாகமாறி அறிவையடைய வேண்டுமென்கிற ஆசையே இல்லாமற் போகிறது.

இவ்வாறாக, இங்கிலீஷ் படித்தவர்களுக்கும் தமிழ்ப் படித்தவர்களுக்கும் சாதாரணமாய்த் தமிழ்ப்பாஷை தற்காலத்திற்குபயோகமான அறிவையூட்டக் காரியத்தில் பிரயோசன மற்றதாகப் போகிறது. இதனால் நமது ஜனங்களுக்கும் தேசத்திற்கும் விளையும் தீங்குகள் அற்ப சொற்பமல்ல. அவற்றைப்பற்றிப்பேசப் புகின் மிகப் பெருகும். படித்தவர்களெல்லார்க்கும் உபயோகமான அறிவைப்பரவச் செய்யப் பிரயோசனமில்லாத ஸ்திதியிலிருக்கும் பாஷை, மற்றெல்லாவற்றிலும் உபயோகத்தையும் ஊதியத்தையும் பெரிதாக நாடி நடக்கும் 19-ம் நூற்றாண்டினிறுதியான இக்காலத்தில், சீக்கிரம் கவனிக்கப்படாவிடிற் சீரழிந்து, சிறப்புகெட்டுச் சிதறிப் போகுமென்பதற்குக் கேட்பானேன்! தமிழ்ப்பாஷை சீரழிந்து சிதறிப் போகாதிருக்க அவற்றிலுள்ள ஆதிநூல்களையும் சிறந்த கிரந்தங்களையுமழிந்துபோகாமற் காப்பாற்ற வேண்டிய தவசியமென்பதிற்றடையில்லை. அத்துடன் அப்பாஷை ஜனங்களால் படித்துக்கொண்டாடப்பட வேண்டுமானால், தற்கால அறிவையூட்டத் தகைமையுடையதாக அதைச்செய்யவேண்டியதும் அவசியமேயாம்.

இந்த அவசியத்தை உன்னித் தமிழ்ப்பாஷையைச் சனப்பிரீதிக் கிசைந்ததாகசசெய்து விர்த்திக்குக் கொண்டுவர இரண்டு அம்சங்களிருக்கவேண்டியது அத்தியாவ

சியகம். ஒன்று: இங்கிலீஷில் கற்றறிந்தாராயிருப்பதுட
ன் தமிழிலும் தேர்ச்சி பெற்றோ சாதாரண ஜனங்க
ளுக்குப் புலப்படு நடையில் உபயோகமான விஷயங்க
ளைப்பற்றி யெழுதுவதோடு, தமிழிற் பயிற்சியில்லாத
இங்கிலீஷ் படித்தவர்கள் அப்பாஷை பயின்று அதில்
ஒருவாறு தேர்ச்சியடைய வகையும் காட்டி எழுதவேண்
டியது முதலவசியம். அவர்கள் எழுதினவை ஓர் சிறு
புஸ்தகமாகவோ பிரசங்கமாகவோ வெளியிடப்பட்டு, மிக
வும் நெருங்கி வரையறுக்கப்பட்ட சிறுவட்டமான சிலர்
நடுவே மட்டும் வழங்கி யமுங்காது, படிததோர் பாமரர்
யாவராலும் படிக்கப்பட்டு நாடெங்கும் வழங்கிவரத்தக்க
வசதிவேண்டிய திரண்டாவ தவசியம். அத்தியாவசிய
கமான இவ்விரண்டு முக்கியாம்சங்களும் ஒருங்கு பொரு
ந்தியிருந்தால்தான், நாடெங்கும் அறிவு பரவி, கற்றோ
ரும் மற்றோரும கராத்திர கலந்து, நமது தேசத்தார்
தமக்குள் தாமே பிரிவினையடையாது, கற்றவர் போன
வழி மற்றவர் பின்தொடரவும், பின் தங்கினரை முன்
செல்லவைக்கக் கற்றவர் கவனித்துழைக்கவுமாக இப்படி
எல்லவரும் ஒருமித்து முன்னகர நம்மவர் ஜாதிமொத்தத்
தில் சீரடைந்து முன்னுக்கு வர வழியுண்டாகும். இந்த
இரண்டு அம்சங்களையும் பொருந்த அமைத்து மேலே
சொன்ன விதம் ஓர் வழி பிறப்பிக்கவேண்டுமென்று
தான் "அறிவைப்பரவச் செய்யும் ஏற்பாடு"* ஒன்று
தயார் செய்து அவ்வேற்பாட்டின்படி 1892௵ மேய்
முதல் விவேகசிந்தாமணி என்னும் பத்திரிகை நடத்
தப்பட்டுவருகிறது.

---

* *Vide* Editor's Introductory article in Vol. I. No. 1. of the Viveka Chintamani for May 1892.

இப்பொழுது அவ்வேற்பாட்டிற்கு இசையவே, மேற்படி விவேகசிந்தாமணியில் வெளியான விஷயங்களில் முக்கியமானதும் நிரந்தர உபயோகமானதுமான அரிய விஷயங்களைத் திரட்டி "விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்" என்னும் பொதுப்பெயரிட்டுத் தனிப்புஸ்தகங்களாக அச்சிட்டு எல்லாருக்கும் உபயோகமாகும்படி பிரசுரித்துவரத் தொடங்கியிருக்கிறோம்.

இத்தலைப்பின்கீழ்ப் பிரசுரிக்கப்படும் புஸ்தகங்கள் யாவரும் விசேஷமாக விரும்பத்தக்கவைகளானது பற்றி செலவையும் சிரமத்தையும் கருதாது நல்லமாதிரியாக, தளமான காகிதத்தில் அச்சிட்டு, நாணயமான உயர்ந்தகட்டடம் செய்து வெளியிட்டுவரத் தீர்மானித்திருக்கிறோம்.

தமிழ்ப் பாஷாபிவிர்த்திக்கு இடையூறாயுள்ள குறைகளில், ஜனங்கள் சாதாரணமாக வாசிப்பதற்கினிமையான கிரந்தங்களில்லாக் குறையுடன், நல்ல மாதிரியில் நாணயமாக அச்சிட்டு கண்ணுக்கு ரமணீயமான ரூபத்தில் புஸ்தகங்கள் வெளியிடப் படாமலிருப்பதும் ஒரு பெருங்குறையென்பது மனப்பூர்வமாய் நம் புத்திக்குப்பட்ட விஷயமாயிருப்பதால், அக்குறையை நிவர்த்திக்க நம்மாலான முயற்சி செய்துள்ளோம்.

ஜனங்கள் ஏராளமாக இப்புஸ்தகங்களை வாங்கி வாசித்து ஆதரிப்பார்களானால், இன்னும் அனேக புஸ்தகங்கள் வெளியிடுவது சாத்தியமாகும்.

ஆகையால் இவ்வேற்பாட்டின் பிரயோஜனத்தை யுணர்ந்த விவேகிகள் யாவரும், இத்தலைப்பின்கீழ் வெளியாகும் புஸ்தகங்களை எல்லாரும் வாங்கி வாசிக்கும்படி போதிப்பார்களென நம்புகிறோம்.

1896. C. V. S.

# கோல்பெர்ட் சரித்திரம்.



## துணிவியாபாரி கடையிலிருந்து முதல்மந்திரி ஸ்தானத்துக்கு வந்த ஒரு வாலிபன் கதை.

### I.

இப்பூலோகம் ஐந்து பெரிய கண்டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறதென்பது பள்ளிப் பிள்ளைகளெல்லாருக்கும் தெரிந்தவிஷயம். நாம் வசிக்கும் இந்த இந்தியாதேசம் இருக்கும் பாகத்திற்கு ஆசியாகண்டமென்று பெயர். நம்மை ஆளும் வெள்ளைக்காரர்கள் ஸ்வதேசமிருக்குமிடத்திற்கு ஐரோப்பாகண்டமென்று பெயர். நம்மையாளும் இங்கிலீஷ்காரர்கள் ஐரோப்பியரானுலும் அவர்கள் ஐரோப்பா கண்டத்தின் ஒரு பாகத்தில் இருப்பவர்களல்ல. அவர்களுடைய தேசமாகிய 'பெரிய ப்ரிடன்' என்பது ஐரோப்பாகண்டத்துக்கருகில் நாலுபக்கமும் கடலால் சூழப்பட்ட ஒரு சிறு தீவு. இந்தப் 'பெரிய ப்ரிடன்' என்னும் தீவு, 'இங்கிலாந்து, ஸ்காட்லாந்து' என்னும் இருநாடுகள் சேர்ந்துள்ளது. இவ்விரு நாடுகளும் ஆதியில் தனித்தனி அரசர்களால் ஆளப்பட்டுவந்து பிற்பாடு ஒருகுடைக்கீழ்ப்பட்டு இதற்குப்பக்கத்திலுள்ள 'ஐர்லாந்துதீவும்' சேர்ந்

து 'பெரிய ப்ரிடனும் ஐர்லாந்துமாகிய ஐக்கிய ராஜ்ஜியம்' என்னும் பொருள்பட இங்கிலீஷில் ஒரு நீண்ட பேர் கொடுக்கப்பெற்றது. நாளது தேதிவரையில் அந்தப்பேர் இன்னம் வழங்கி வருகிறது.

இந்தியாவிலுள்ள வெள்ளைக்காரர்கள் இங்கிலீஷ்காரர்கள் மட்டுமன்று. இவர்களோடு ஆதியில போட்டிபோட்டு இன்றைக்கும் இத்தேசத்தில் இரண்டொரு ஸ்தானங்களை அவர்கள் கைவசத்தில் வைத்து ஆண்டுவரும் இன்னொரு வெள்ளைக்கார ஜாதியாரிருக்கிறார்கள். இவர்கள்தான் அடுத்த புதுச்சேரி, காரைக்கால் இவற்றை யாண்டுவரும் 'ப்ரெஞ்சுக்காரர்கள்.' இந்த ப்ரெஞ்சுக்காரர்கள் சுதேசத்துக்கு 'பிரான்ஸ்' என்று பெயர். இவர்கள் நம்மையாளும் இங்கிலீஷ்காரர்களுக்கு ஐரோப்பாவில் அடுத்த அயல்தேசத்தார். இவர்களுடைய பிரான்ஸ்தேசம் பெரிய ப்ரிட்டனுக்கு எதிர்த்தாப்போலிருக்கிறது. இவ்விருதேசங்களுக்கும் நடுவில் ஒரு சிறிய கால்வாய்தானிருக்கிறது. இந்த பிரான்ஸ்தேசம் பெரிய ப்ரிட்டனைப்போல் நாலாபக்கமும் கடல்சூழ்ந்த தீவாயில்லாமல் ஐரோப்பாகண்டத்தில் அதன் ஒருபாகமாக விருக்கிறது. இதன் தலைநகருக்குப்பேர் பாரிஸ். இது செல்வத்திலும் நாகரீகத்திலும் ராபஜியவல்லபத்திலும் இங்கிலாந்துக்கு மிகவும் குறைந்த

தேசமல்ல. இந்தியாவில் இவர்க ளதிகாரம் வலுக்காமற்போனாலும் ஐரோப்பாகண்டத்தில் இவர்கள் அதிகாரம் ஓங்கிவளர்ந்து தற்காலம் அகரு மிக்க ஆதிக்கம் பெற்று விளங்கும் ஐந்து பெரிய தேசங்களில் இது முக்கியமான ஒன்றாக விளங்குகிறது. முற்காலத்தில் இத்தேசம் இப்பொழுதிலும் அதிக மகிமை பெற்றுக் கொஞ்சக்காலத்திற்கு விளங்கியது.

இப்படி மகிமைபெற்று விளங்கிய இந்த பிரான்ஸ் தேசத்தின் மாகாணங்கள் ஒன்றில் ரெய்மஸ் என்னும் புராதனப் பட்டண மொன்றுண்டு. அப்பட்டணத்தில் ஒரு துணிவியாபாரி யிருந்தான். அவனுடைய கடையில் வியாபாரம் செய்ய வந்தவர்களுக்குத் துணிகளை யெடுத்துப்போட்டுக் காட்டுவதற்காகப் போடப்பட்டிருந்த மேஜையின் பின்பக்கத்தில் ஒல்லியான உடம்பும், அழகும் புத்திவிசாலமும் அமைந்த முகச்சாயல்களு முடைய பையன் ஒருவன் நின்றுகொண்டு, கைபட்டுக்கரைந்துபோன பழைய புஸ்தகமொன்றைக் கையிலேந்திப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் பேர் பாப்டிஸ்ட் என்று சொல்வார்கள். அவன் முழுப்பேர் ஜீன் பாப்டிஸ்ட் கோல்பேர்ட்.

கடைக்குப் பின்புறத்தில் தோல் மஞ்சமிட்ட நாற்காலியில், முன்னால் ஒருமேஜை போட்டுக் கொண்டு, அந்தக்கடைக்கு எஜமானான கிழ விபா

பாரி உடல் மெலிந்து தோல்சுருங்கி 'வடாந்தூக் கவந்த காக்கைபோல்' காசு சேர்ப்பதிலே கண் ணும் கருத்து முடையவனுய் உட்காரந்திருந்தா ன். அவன் பேர சாத்தாணி என்று சொல்லலாம்.

சாத்தாணி, பாப்டிஸ்ட் என்பவனைப் பார்த்து "இன்றைக்குத் தேதியென்ன?" என்று கேட் டான்.

அந்த வாலிபன் திடுக்கிட்டுத் திரும்பி "இன் றைக்கு 1632ஹு அக்டோபர்மீ 30உ" என்று பதிலுரைத்தான்.

"அது முற்றும் சரியல்ல: நீ சொன்ன மாசமு ம தேதியும் சரிதான்; வருஷம் தப்பு. இது 1634-வது வருஷம் அப்பேன்; இது தெரியவே ண்டாமா? ஏன், உனக்கு வயது 18 ஆய்விட்டதே; சரியாகக் கணக்குப்பாரக்கத் தெரிந்திருக்கவேண் டாமா?" என்று உரதத சத்தத்தோடு அந்த கிழவியாபாரி வெடுவெடுப்பாயக் கூறினுன்.

"தெரிந்திருக்கவேண்டியதுதான், ஐயா; கண க்குப் பார்ப்பதில் எனக்கு மெத்தப் பிரியம்தா ன். ஆனுல், என்மனசு சரித்திரவிஷயத்தில் கொ ஞ்சம் கவனமாயிருந்துவிட்டது; நீங்கள் கேட்ட பொழுது நான்"——

"ஓ! சரி; வழக்கம்போல் வாசித்துக்கொண் டிருந்தாயாக்கும். ஏது! நீ உறுப்பட்டு என்னைத் திற்காலது உதவுவாய் என்று தோன்றவில்லை.

அது கிடக்கிறது. நீ என்ன புஸ்தகம் வாசித்துக்கொண்டிருந்தாய்? அதில் உனக்கு அவ்வளவு பிரியம் விளைப்பது என்ன?"

"ஐயா, நான் 'டியூக் ஆவ் மான்ட்மோரென்ஸி' என்பவரின் விசாரணையைப்பற்றி வாசித்துவருகிறேன்."

"டியூக் ஆவ் மான்ட்மோரென்ஸியா! அவருக்கும் உனக்கும் என்னவந்தது? ஓ! ஓ! உங்கள் முன்னோர்களில சிலர் காஸ்டேரில் பிரபுக்களாகவிருந்தமையால் நீயும் ஒரு பெரிய பிரபு வென்று நினைத்துக்கொள்கிறாய்போல் தோன்றுகிறது"

"'காஸ்டெரில்' அல்ல ஐயா, 'காஸில்ஹில்' என்பது சரியானபேர். காஸில்ஹில் பிரபுக்கள் ஸ்காட்லாந்திலும், பிரான்ஸிலுமுள்ள கோல்பெர்ட் குலத்தினர்க்குப் பொதுவான மூதாதைகள். இருதாரத்தாரும் இன்றைக்கும் ஒரே விருது உடையவர்களாய் இருப்பது நான் மேலேசொல்லியதற்கு ஆதாரமாகும்."

"பூ! அதெல்லாம் எனக்காகவேண்டியதென்ன? உன் தாயாரும் என் தங்கையும் ஒன்றாகப் பள்ளிக்கூடத்தில் வாசித்த விசுவாசத்தைப் பாராட்டி உன் தாயார் உன்னுடையநாமகரணச் சடங்கு நடக்குங்கால் என்னை யழைத்து உனக்குப் பெயரிடச்சொன்னபொழுது உங்கள்முன்னோர்கள் யாரென்று உங்கள் குலம் கோத்திரமெல்லாம் விசாரி

த்தேதனென்று நினைக்கிறாயோ? அதெல்லா மில்லை. எங்கள் வர்த்தகக்கொடி பறக்கும் இவ்விடத்தில் நாங்கள் அதையெல்லாம் கவனிக்கிறதில்லை. எங்கள் வேலையெல்லாம் துணி விற்கவேண்டியதுதான்."

"எனக்கு அது நன்றாய்த்தெரியும், ஐயா," என்று பாப்டிஸ்ட் பணிவோடு பதிலுரைத்து, "என்னாலானமட்டும் வியாபாரத்தில் வல்லவனாக முயற்சிப்பேன், இது உறுதி." என்று சொன்னான்.

"வரவர நீ கெட்டிக்காரனாவாய் என்று சொல்லத் துணிகிறேன். அது கிடக்க, நீ டியூக் ஆவ் மான்ட்மோரென்ஸியைப் பற்றி வாசிக்கிறாயே, அவரை என்னத்திற்காக விசாரணைசெய்தார்கள்? சொல்லு, கேட்போம்" என்றான் கிழவியாபாரி.

அதற்கு அவ்வாலிபன் தடதடவென்று பின்வருமாறு பதிலுரைத்தான: "ஐயா, 13-வது லூயி அரசன் 1629-ம் வருஷத்தில் பாரிஸ் நகரை விட்டுப்புறப்பட்டு, பொறுக்கமுடியாத குளிராயிருந்தாலும் அதையும் பார்க்காமல் நேரில்சென்று டியூக் ஆவ் நிவேர்ஸ் அவர்களுக்கு ஒத்தாசைசெய்து, டியூக் ஆவ் ஸேவாய், 'மான்ட்ஸெர்ராட்' என்னும் ஸ்தலத்தைப் பிடித்துக்கொள்ளச்செய்த யத்தனங்களையெதிர்த்து அவரை ஆதரிக்கச் சென்றபொழுது"——

அவன் சொல்லிமுடியுமுன் அந்தக் கிழவியாபா

ரி அவன் தங்குதடையின்றி தாராளமாய்ச் சரித்திர விஷயங்களை யெல்லாம் விவரித்துக்கூறிக்கொண்டு போவதைக்கண்டு அதிசயித்து, "ஏலப்பா, இவன் விஷயங்களை யெல்லாம் ஒன்றுவிடாமல் தொடுத்துக்கொண்டுபோகிற அதிசயத்தைப்பார். இந்தப் பயல் பிறக்கும்போதே இராஜதந்திரியாகப் பிறந்திருக்கிறுன் என்று நான் சொல்லுவேன்." என்று சொன்னுன்..

பாப்டிஸ்ட் இப்படித் தன்வார்த்தையைத் தடுத்து வீண்வார்த்தைகள் பேசியதற்காக முகத்தில் கோபக்குறி விளங்கப் பின்னும் தொடர்ந்து சொல்லுகிறுன்:—

"நல்லது, ஐயா, வாலிபதிசையிலுள்ள அவ்வரசன் 'ரூஸ்'கணவாயைத் தன்பலாக்கிரமத்தால் கடந்து சென்று, 'டியூக் ஆவ் ஸேவா'யினுடைய சைனியங்களை வென்று, 'காசால்' நாட்டு ஸ்பானியர்களைத்துரத்தியடித்து, 'பிக்நேரோல்' என்னும் ஸ்தலத்தைப்பிடித்துக்கொண்டு, 3-வருஷங்களுக்குமுன்'குவிராஸ்கியூ'வில் நடந்த சமாதான உடன்படிக்கையிற் கண்ட நிபந்தனைகளின்படி 'டியூக் ஆவ் நிவெர்ஸ்' வசம் 'மான்டுவா'மாகாணத்தை ஒப்புவித்துவிட்டு 'இத்தலிதேசத்தை ஆபத்தினின்றும் விடுவித்த ஆப்த்பாந்தவன்' என்று பட்டப்பேர் சூட்டிக்கொண்டு தன் தலைநகருக்குத் திரும்பிவருகையில் அங்கே அவருடைய சகோத

ரன் கலகம் செய்தெழும்ப அனேக பிரபுக்கள் அவன்வசம் சேர்ந்துகொண்டு தன்னதிகாரத்தை யெதிர்த்து நிற்பதைக் கண்டான். அப்பொழுது 'டியூக் ஆவ் மான்ட்மோரென்ஸி' என்பவர், அவர் கவர்னராயிருந்த மாகாணத்தை அரசனுக்கு விரோதமாகக் கிளப்பிவிட்டு அவரும் அரசன் சகோதரர் பக்ஷம் சேர்ந்துகொண்டார். ஆனால் அரசன் திரும்பிவந்தபின் 'காஸ்டில்நாடரி' என்னுமிடத்தில் நடந்த சண்டையில் ஆயுதமும் கையுமாக அவர் பிடிபட்டுப்போனதால் 'டியூக் ஆவ் ரிச்லு' அவர்களின் உத்தரவுப்படி 'டூலூஸ்' என்னுமிடத்தில் அவர் 1632-ம் வருஷம் அக்டோபர் மீ 30உ யில் சிரச்சேதம் செய்துவிடப்பட்டார்.''

" கிழவியாபாரி இதையெல்லாம் கேட்டிருந்து கடைசியில் " இதுகளெல்லாவற்றிலும் கார்டினல் ரிச்லு*வினுடைய தந்திரோபாயங்கள் கொஞ்சம் கலந்திருக்கும்'' என்று சொன்னார். இந்த வி

* கார்டினல் ரிச்லூ என்பவர் (1585-ல்பிறந்து 1642-ல் இறந்தார்) 13-வது லூயி அரசனுடைய முதல் மந்திரியாகவிருந்தார். இவர் குரூரமும் பழிவாங்கும் சுபாவமு முடையவரும் நன்னெறியை விட்டு நடப்பவருமாயிருந்தாலும், பழைய பிரான்ஸ் ராஜ்ஜியத்தின் பேர்போன ராஜதந்திரிகளில் இவரை ஒருவராய்மதித்து சரித்திரகர்த்தர்கள் எழுதியிருக்கிறார்கள். அவருக்குப்பின் முதல்மந்திரியாக வந்தவர்பேர் மாஜரீன். அவருடைய பேர் இந்தக்கதையில் வருகிறது.

யாபாரி இராஜாங்க விஷயங்களைப் பேசுவதில் விருப்பமில்லாதவன்போல் காட்டினாலும் உண்மையில் அதுவிஷயத்தில் இவனுக்கு வெறுப்பில்லையென்பது இதனால் விளங்கும்.

பாப்டிஸ்ட் உற்சாகம் மேற்கொண்டு, "மந்திரிகள் மகா கடுமையாகவும் கொடுங்கோன்மையாகவும் சுயேச்சைப்படிக்கும் நடந்து கொள்கிறவர்களாக விருக்கிறார்கள்; நான் எப்போதாவது முதலமந்திரியாக விருக்க நேர்ந்தால்"——

இந்த வார்த்தைகள் சொன்னவுடனே கடைக்குப்பின்னாலுட்கார்ந்திருந்த கிழவியாபாரியும், அங்கிருந்த மற்றக் கடைக்காரப்பையன்களும், வாசலிலே குப்பை கூட்டிக்கொண்டிருந்த கடையின் வேலைக்காரனுங்கூடச் சேர்ந்துகொண்டு எல்லாரும் 'கொல்' என்று சிரித்தார்கள். அவர்கள் சிரித்த சப்தம் இவனை மேல்பேசவிடாமல் தடுத்ததோடு அவர்கள் பரிகாசம் செய்தது பொறுக்காமல் இவனுக்கு முகம் சிவந்து போய்விடும்படி செய்தது.

அந்தக்கடையில் மூட்டைதூக்கி மலையன் என்பவன் "இந்தக்காலத்துக் குழந்தைகள் குழந்தைகளில்லை" "காலம் மாறிவிட்டது" என்று சிரித்துக்கொண்டு இரண்டு மூன்று தரம் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.

அந்தக்கடையின் எஜமானாகிய கிழவியாபாரி

யோ "நீ-மு-தல்-மந்-தி-ரி-யா-க-வந்-தால்" என்று ஒவ்வொரு வார்த்தையையும் அசை அசை யாகப் பிரித்து நீட்டிக்கொண்டு சொன்னான். "நீ-மு-தல்-மந்-தி-ரி-யா-க-வந்-தால்!" என்று நீட்டிவிட்டு திடீரென்று தன்குரலை மாற்றிக்கொண்டு "ஓய், பெரியவரே! தயவுசெய்து தற்காலம் பிழைப்புக்கு வழியாகவிருக்கும் இந்தக்கடை வேலையை நன்றாகச்செய்ய முதல் முதல் கற்றுக்கொண்டு, இந்தமட்டும் நல்லஜீவனம்கிடைத்ததே யென்று வந்தனமுள்ளவனாயிரும்; அப்புறம் முதல்மந்திரியாக வரக் கோழிக்களுக் காணலாம்" என்று துடுக்காகச் சொன்னான்.

"ஐயா, மன்னிக்கவேணடும். ஏதோ அந்த சமயத்தில் மனதிலுதித்ததைப் பேசிவிட்டேன். நான் எப்படி எப்படி யிருக்கவேண்டிய தவசியமோ அப்படி யெல்லாமிருந்து உம்மிடத்தில் சரியாக நடந்து கொள்ள முயற்சிப்பேன்" என்றான் பாப்டிஸ்ட்.

"சரி, சரி, நல்லது, அதைவிடு. உன் கையிலுள்ள புஸ்தகத்தை அப்பால் வைத்துவிட்டு நான் சொல்வதைக் காதுகொடுத்துக்கேள். இதோ ஒரு கடிதமிருக்கிறதுபார். பாரிஸிலுள்ள பெரிய 'பாங்கர்'களான 'சின்னணி அண்டு மாஜராணி' என்னும் பணவியாபாரக் கம்பனியைச் சேர்ந்த மான்ஷியர் சின்னணி என்பவர் பேருக்கு அது

எழுதப்பட்டிருக்கிறது. இதைக் கொண்டுபோய் அவரிடம் கொடுத்துவிட்டு அப்படியே இந்தத் துணிகளையும் அவருக்குக் கொண்டுபோய்க்காட்டிவா. இந்தவூருக்குப் பக்கத்தில் அவருக்கு நாட்டுப்புறவாசமாயிருக்க அவர் வாங்கியிருக்கும் பெங்களாவுக்கு படுதாக்கட்டத் துணி வேண்டுமென்று சொன்னார். இந்தா, இத்துணிகளின் விலைகளை நன்றாகக் கவனித்து மனதில் வைத்துக் கொள். இந்த 1-ம் நெ. துணியின்விலை கெஜம் மூன்றுவராகனென்று குறிக்கப்பட்டிருக்கிறது. 2-ம் நெ. 6-வராகன்; 3-ம் நெ. 8-வராகன்; 4 ம் நெ. 15-வராகன். இந்தவிலை மிகக்கிராக்கிதான்; ஆனாலு, அது மிகவும் நேர்த்தியானசரக்கு. அந்த மாதிரி வேறே கிடைக்கமாட்டாது."

பாப்டிஸ்ட் மாதிரிக்காக துணிகளின் துண்டுகள் வெட்டி ஒட்டிய அட்டையொன்றைக் கையிலெடுத்துக்கொண்டு "நீங்கள் சொன்ன விலைக்கு ஏதாவது கொஞ்சம் குறைக்கச் சொன்னால் குறைக்கிறதா?" என்று கேட்டான்.

"குறைக்கிறதா! ஒரு காசுகூடக் குறைக்கக் கூடாது. சொன்னவிலைப்படி கைரொக்கம் போடவேண்டும். அதற்கு ஒரு பைசா கம்மிப் பட்டாலும் கூடாது. ஞாபகமிருக்கட்டும்" என்றான் கிழவியாபாரி.

பாப்டிஸ்ட் சரிதானென்று சொல்லிவிட்டு, மூ

ட்டைதூக்கி மலையன் துணிகளைத் தோளில் போ
ட்டுத் தூக்கிக்கொண்டுவர, கடையைவிட்டுப் புறப்
பட்டு மான்ஷியர் சிஞ்ஞோரி யென்னும் பணவியா
பாரி இறங்கியிருந்த ஹோட்டலைநோக்கிக் கடுமை
யாக நடந்துசென்றான்.

வழியில் மலையன்: "பாப்டிஸ்ட் ஐயா, கடை
க்கார ஐயா சொன்னது ஞாபகமிருக்குமா? முத
ல் நெ. 3-வராகன்; 2-நெ. 6-வராகன்; 3-வது
நெ. 8-வராகன்; 4-வது நெ. 15-வராகன். அது
தான் நீர் சொல்லவேண்டிய கதை, தெரியுமா.
ஏன், என்னசமாசாரம். கீழே பார்த்துக்கொண்டு
என்னயோஜிக்கிறீர்? நீர் தரையில் குண்டூசி தேடு
கிறவரைப்போல் காணப்படுகிறீரே."

"மலையா, உன்னிடத்தில் உண்மையைச் சொ
ல்கிறேன். நமது கடைக்கார ஐயா என் மாதிரி
யைச் சரியாக அறிந்துகொள்ளவில்லை என்று நி
னைக்கிறேன். நான் கடைக்காரனாக இருக்கவேண்
டியது என் தலைவிதியாக இருந்தால் நல்ல வியா
பாரியாக இருக்கவேண்டுமென்று விரும்புகிறே
ன்; ஆனால் ஒருவன் அவன்வேலையைப் பாதிக்கா
த பொழுது ஒரு புஸ்தகத்தை வாசிப்பதில் சந்
தோஷமெடுத்துக்கொண்டால் அதனால் அவன்
கெட்டவியாபாரியாய்விடுவானென்று நான் நினை
க்கவில்லை."

மலையன்: "பாப்டிஸ்ட், நீ நல்லபிள்ளை; நீ

சொல்வது சரியாகவிருக்கலாம். ஆனால் ஒன்று, உனக்குக் கொஞ்சம் மறதி அதிகந்தான். ஆனால் வரவர நீ நல்ல வியாபாரியாவாய் என்பதற்குச் சந்தேகமில்லை. வா, சந்தோஷமாயிரு; இதுதான் அவரிருக்கும் ஹோட்டல்.''

அந்த ஹோட்டல்வாசலிலிருந்த ஒரு ஆளிடம் பாப்டிஸ்ட், "நான் மான்ஷியர் சின்னணியைப் பார்க்க விரும்புகிறேன்'' என்று சொன்னான்.

அந்த ஆள், "வலதுபுறத்திலுள்ள முதல் மாடிப்படி வழியாகச் சென்று 8, 10 - ம் நெ. இட்ட கதவுகளை இடி.'' என்றான்.

மலையன் கூடவர, பாப்டிஸ்ட் மேலே சென்று கீழேயிருந்த ஆள்சொன்னபடி கதவையிடித்தான்.

உடனே ஒரு ஆள் வந்து பச்சைப்பட்டும் சிவப்புப்பட்டும் கலந்து பூப்போட்டமாதிரி உயர்ந்த ஆடைகள் தரித்திருந்த இளம்பிராயமுள்ள ஒரு கனவானிடம் அவனைக் கொண்டுபோய் விட்டான்.

அந்த கனவான்முன் வந்ததும் பாப்டிஸ்ட் அவருக்கு அஞ்சலிசெய்து "நான் மான்ஷியர் சாத்தானியிடமிருந்து வருகிறேன்'' என்று தெரிவித்துக்கொண்டான்.

உடனே மலையன் தன் தோளிலிருந்த துணியமூட்டைகளை ஒரு மேஜைமேல் போட்டு "தங்கள் கனத்துக்கு வேண்டியதைப் பொறுக்கிக் கொள்ள இதோ அனேகம் துணிகள் இருக்கின்றன'' எ

ன்று வணக்கமாய்ச் சொன்னான். அந்தப் பண வியாபாரி "பார்ப்போம்" என்று சொல்லிக்கொண்டு மலையன் அதிக ஆவலோடு விரித்துக்காட்டிய துணிகளை அலக்ஷியமாகத் தன் நுனிவிரல்களால் தடவிப்பார்த்து, கடைசியில் அவைகளை நன்றாய்ப் பார்க்காமலே ஒன்றை எடுத்துவைத்து "இதுதான் எனக்கு நன்றாய்ப் பிடித்திருக்கிறது; இதன் விலையென்ன?" என்று கேட்டான். பாப்டிஸ்ட் "கஜம் 15-வராகன்" என்றான். அவன் சொல்லுகையிலேயே மலையன் வாயைக் கையால் மூடிக்கொண்டு ஒரு முகநெறிப்பு நெறித்தான். அதை விற்கிறவர் வாங்குகிறவர் இருவரும் பார்க்கவில்லை.

பாப்டிஸ்ட் விலை சொன்னதும் அந்தப் பண வியாபாரி "நல்லது; இது என்னுடைய நாட்டுப்புறவாசமாகிய பங்களாவில நான் படிக்கும் அறைக்குப் படுதாக்கட்டுவதற்காக வேணடும். இந்தத் துண்டில் எத்தனை கஜம இருக்கிறது?" என்று கேட்டான்.

மலையன் அத்துண்டிலுள்ள அடையாளத்தைப் பார்த்து "30 கஜமிருக்கிறது சுவாமி, அளந்து காட்டச் சொன்னீர்களானால்,"——

"அதெல்லாம் வேண்டியதில்லை அப்பா, மான்ஷியர் சாத்தாணியை எனக்குத்தெரியும். அவரை நம்பலாம். கஜம் 15-வராகன் விகிதம் 30 க

ஜம் 450 வராகனுகிறது, இந்தா;" என்று சொல்லிவிட்டு அப்படியே அலக்ஷியமாகச் சென்று அங்கே திறந்து வைத்திருந்த மேஜையில் கையை வைத்து ஒரு கை நிறையப் பணத்தை அள்ளி பாப்டிஸ்டிடம் கொடுத்தான். கொடுத்துவிட்டு, "தம்பி, உனக்கு எழுதத்தெரியுமா" என்று கேட்டான்.

பாப்டிஸ்ட் இப்படி கேட்டகேள்வியினுல் அதிக வருத்தப்பட்டவனுகி முகம் சிவக்க வெட்கப்பட்டுப்போய், "தெரியும், ஐயா" என்று பதில் சொன்னுன்.

"நல்லது, ஒரு ரசீது எழுதிக்கொடு" என்று கேட்டான் அந்தப் பணவியாபாரி. பாப்டிஸ்ட் அப்படியே ரசீதுஎழுதிக் கொடுத்துவிட்டு பணத்தை எடுத்துக்கொண்டான்; மலையன் பாக்கித்துணிகளை எல்லாம் எடுத்து மூட்டைகட்டித் தோளில் வைத்துக்கொண்டான். இருவரும் பிறகு அப்பணவியாபாரிக்கு அஞ்சலிசெய்து விடைபெற்றுக்கொண்டு வெளியே வந்துவிட்டார்கள்.

வெளியே வந்தவர்கள் கடைக்குத் திரும்பிவருகையில் மலையன் சதாரணமாய் இருப்பதைவிட அதிக உல்லாசமாயிருந்தான். பாப்டிஸ்ட் மனதில் வேறு எதையோ நினைத்துக்கொண்டு இருந்ததால் அவன் உல்லாசக்குதிப்பைக் கவனிக்கவில்லை. சாத்தாணி அவன் கடையின் வாசற்ப

டியில் நின்றுகொண்டு பாப்டிஸ்டும், மலையனும் திரும்பிவருகிறதைத் தூரத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்தான். அவர்கள் கிட்டவந்ததும் "சரியா? சரிதானு?" என்று கேட்டான்.

மலையன் கடைக்குள்வந்ததும், "கடைசியில் இங்கேவந்து சேர்ந்தமடா அப்பா," என்று சொல்லிக்கொண்டு தன் தோளின்மேலிருந்த துணி மூட்டையைக் கடையிலிருந்த மேஜைமேல் போட்டான்.

சாத்தானி அதிகஆவலோடு அம்மூட்டையைத்திறந்துபார்த்தான். பார்க்கையிலேயே "யாதொரு பிசகும் செய்யவில்லையே" என்று கேட்டான். பாப்டிஸ்ட் அமரிக்கையாய் "நான் யாதொரு பிசகும செய்யவில்லையென்று நினைக்கிறேன்" என்றான்.

மலையன் வருகசிரிப்பை அடக்கிக்கொண்டு "நீ பிசகிப்போய்விட்டாய் என்று நான் நினைக்கிறேன்" என்றான்.

"மலையா, பிசகிப்போய்விட்டானு?— நிஜந்தானு?" என்று சொல்லிக்கொண்டே அந்தக் கிழவியாபாரி துணிகளையெல்லாம் எடுத்துப்போட்டு அதில் கட்டியிருந்த சீட்டுகளை நுட்பமாய்ப் பார்வையிட்டான். பார்வையிட்டு வருகையிலேயே "எனக்கு முன்னலே தெரியுமே! அந்தக் கள்ளப்பயலுக்குப்பிசகுசெய்யாமல் வியாபாரம் செய்

து வர முடியாது. பயலே நீ பிசகுசெய்திருப்ப து வாஸ்தவமாயிருந்ததோ நீ மறுபடியும் மான்ஷி யர் சின்னுணியிடம் ஓடி அதிகப்படி வரவேண்டி தொகையை அவரைக்கேட்டு வாங்கிவரவேண்டு ம். அவர் கொடுக்கமாட்டேன் என்ருல் உன் சம்பளத்திலிருந்து பிடித்து ஈடுகட்டிக் கொடுக்க வேண்டும். இதை நீ அறிவாய். 3-ம் நெ. இல்லை. 3 - ம் நெம்பர் துணியின் விலையென்ன? 6 - வரா கனு ?; இல்லை, 8 - வராகன்—என்க்கு மனம் தடு மாறிப்போகிறது." என்ருன்.

பாப்டிஸ்ட் திடுக்கிட்டு "எட்டுவராகனு !—எட் டுவராகனு!" "அது நிச்சயந்தானு ஐயா?" என் றுகேட்டான்.

"திருட்டுப்பயலே, கடைசியில் நான்தான் பிச கு செய்துவிட்டேனென்று என்பேரில் குற்றம் கட்டிவிடப்பார்க்கிருயோ. 3-ம் நெம்பரின் விலை 8 வராகனடா பயலே என்கிறேன். எனக்கு பய த்தினுல் பாதிப் பிராணன் போய்விட்டது. இந் தப் பயல் அதை 6-வராகனுக்கு விற்றுவிட்டு வந்திருக்கிருனென்று நான் பந்தயம் கட்டுவே ன்;" என்ருன் அந்தக் கிழவியாபாரி.

பாப்டிஸ்ட்: "ஐயா, 8 வராகன் துணியை 6 வராகனுக்கு விற்றுவந்து விட்டதாக நீர் சொல்ல, முட்டாளாகிய நான் அதை 6 வராகனுக்கு விற் று வந்திருக்கிறேன்; ஆனல்"—

அந்தக் கிழவியாபாரி அவன் 15 வராகனுக்கு விற்றதாகச்சொன்ன வார்த்தையைக் கேட்டதும் சந்தோஷம் பொறுக்கமாட்டாமல்வந்ததை யடக்கிக்கொண்டு பாப்டிஸ்ட் முற்றும் பேசுமுன் "பதினைந்தா? பதினைந்தா? நல்ல பையன் நீ; நேர்த்தியான பையன்; பாப்டிஸ்ட், ஒருநாள் நீ உன் குடும்பத்தாருக்கெல்லாம் கௌரவம் விளைப்பவனுயிருப்பாய். பதினைந்தா! உனக்கு நாமகரணமிட்ட நான் உன் விஷயத்தில் மெத்தவும் பெருமை கொண்டாடுகிறேன். பதினைந்தா! அப்பா, சந்தோஷம் பொறுக்கப்படவில்லையே. 6 வராகன் பெருததுணிக்கு 15 வராகனு? நல்ல வியாபாரம். 30 கஜம் துணி 8 வராகனுக்கு பதிலாக 15 வராகனுக்கு விலையாகியிருக்கிறதா! 15-ல் 8-ம் போனால் பாக்கி 7 வராகன் லாபமிருக்கிறது. 30 கஜத்துக்கும் 210 வராகனுகிறது : எழுநூற்றி முப்பத்தி ஐந்துரூபாய் லாபம். மெத்த சந்தோஷம். நமக்கு நல்லநாள் இது." என்று ஆனந்தம் பொங்கப்பேசினுன்.

இதை யெல்லாம் கேட்ட பாப்டிஸ்ட் முன் செல்ல இருந்தவன் பின்வாங்கின வண்ணமாய்: "ஐயா எப்படி சந்தோஷம்? இதுதான் சமயமென்று எல்லாவற்றையு மெடுத்துக்கொள்ள நினைக்கிறீரா?" என்று கேட்டான்.

அந்த நாணயங்கெட்ட வியாபாரி "ஓ! உனக்

கும் பங்குவேண்டுமோ, சரி இந்தலாபத்தில் உனக்கு ஒரு பங்கு தருவதாக ஒப்புக்கொள்கிறேன்" என்றான்.

பாப்டிஸ்ட் தான் கடைக்குத் திரும்பியதும் கழட்டிவைத்த டொப்பியை மெதுவாய் கையிலெடுத்துககொண்டு "ஐயா, அப்படிப்பட்டகாரியம் எதற்கும் நான் உடன்படக்கூடாது" என்று சொல்லி மிகுதிவார்த்தைகளையும் பேசி முடிக்குமுன் பேராசைகொண்ட அந்த வியாபாரி "பலே! பலே! பையா, உனக்குப் பங்கு வேண்டாமானால் எல்லாவற்றையும் எனக்குக் கொடுத்துவிடு" என்று குறுக்கிட்டுச்சொன்னான்.

பாப்டிஸ்ட் தான் சொல்லிவந்ததைத்தொடர்ந்து: "நான் அவ்வளவு பெருந்தவறிழைத்த அந்த கனவானிடம் திரும்பியோடி என்னை மன்னிக்கும்படி அவரைக்கேட்டுக்கொண்டு, அவர் அதிகபடி செலுத்திய பணத்தை அவரிடம் திரும்பிக் கொடுத்துவிட்டு வருவேன்." என்று சொல்லிவிட்டு, இவ்வார்த்தைகளைச் சொல்லுகையிலேயே வாசலோரமாகப் பின்னால் நகர்ந்துவந்துகொண்டிருந்தவன், கடைசி வார்த்தை வாயைவிட்டு விழுந்ததும் விழாததுமாகவிருக்கையிலே வாசற்படியை ஒருதாண்டலாகத்தாண்டி வெளியில் குதித்துப் பறந்தோடிப்போய்விட்டான்.

திருட்டுத்தனமுள்ள அந்தக் கிழவியாபாரி தான்

எதிர்பாராத இந்த சம்பவத்தைக்கண்டு திகைப்பும் கோபமும் மேலிட்டுவா அசைவற்று நின்றான். அவனை அப்படியே நிற்கவிட்டு, நாம், வெளியே ஓடிய மனச்சாக்ஷிக் கொப்பிதமாய் நடக்கும் அந்தப் பையனைத் தொடார்ந்து மான்ஷியர் சின்னணி யென்பவர் ஹோட்டலுக்கு அவனோடுகூடச் சற்றுப்போய் வருவோம்.

---

## II

சாத்தானியின் துணிக்கடையிலிருந்து மான்ஷியர் சின்னணியிருக்கும் ஹோட்டலுக்கு மூச்சு வாங்க ஓடிவந்த பாப்டிஸ்ட், முன் தனக்குக் கதவைத்திறந்த அப்பணவியாபாரியின் கையாளைப் பார்த்து 'நான் மான்ஷியர் சின்னணியைப்பார்க்கக் கூடுமா ?' என்று கேட்டான்.

அதற்கு அந்தக் கையாள் "அவர் இன்னும் வெளியே போகவில்லை ; ஆனால் நீர் இப்பொழுது அவரைப் பார்க்க முடியுமென்று எனக்குத் தோற்றவில்லை. எஜமானர் வெளியில்போக உடைதரித்துக்கொள்கிறார்" என்றான்.

பாப்டிஸ்ட் அந்த ஆளைப்பார்த்துப் பரபரப்புள்ளவனாய், "ஐயா, உடனே அவரைப்பார்க்கும்படி அனுமதி கொடுக்கக்கேட்டுக் கொள்ளுகிறேன் ; அவரை நான் பார்க்கவேண்டியது நிரா அவசியமாக விருக்கிறது." என்றான்.

அதற்கு அந்தக் கையாள் "நான் போய் விசாரிக்கிறேன்" என்றுசொல்லிக் கதவைத்திறந்து கொண்டு உள்ளேபோனான். போகையில், பாப்டிஸ்ட் அவரைப் பார்க்கவேண்டிய அவசரத்தில் அவன் காலடியைத் தொடர்ந்துகொண்டு அவன் பின்னேயே சென்றாலும் அந்தக்கையாள் அவன் தனக்குப் பின்னே வருவதைப் பார்க்கவில்லை.

'காமாட்டி' என்னும் பெயருடைய அந்தக் கையாள் உள்ளேசென்றதும் அங்கே நிலைக்கண்ணாடி முன் நின்று அழகுபார்த்து உடைதரித்துக் கொண்டிருந்த அப் பணவியாபாரி, நிலைக்கண்ணாடியில் பார்த்துக் கொண்டு நின்றது நின்றவண்ணமாய் தலைதிரும்பாமலே "என்னடாசெய்தி, காமாட்டி ?" என்றான்.

"சற்றுமுன் இங்குவந்திருந்த சிறுவரான துணிவியாபாரி தங்களைப் பார்க்கவேண்டுமென்று வந்திருக்கிறார் சுவாமி." என்று காமாட்டி பதில் உரைத்தான். மான்ஷியர் சின்னணி "இப்பொழுது பார்க்கச் சரிப்படாது" என்று சொல்லிவிட்டு "காமாட்டி! என் உடைவாள் எடுத்துவா" என்று கம்பீரமாய்ச் சொன்னார்.

அப்பொழுது பாப்டிஸ்ட் கெஞ்சுங்குரலோடு "ஐயா, ஒருவார்த்தைசொல்ல உத்திரவாகவேண்டும்" என்று பிரார்த்தித்துக்கொண்ட சப்தம் அவர் காதில் விழுந்தது.

விழவே, அப்பணவியாபாரி கோபங்கொண்டு அவன்பக்கமாய்த்திரும்பி " நீ இங்கு வந்தகாரணம் என்ன? உனக்கு என்னவேண்டும்? உனக்குத்தான் பணம் கொடுத்தாய்விட்டதே, கொடுக்கவில்லை?" என்று கேட்டுவிட்டு, " நான் வேலையாகவிருக்கிறேன். போ!" என்று அதட்டிச் சொன்னான்.

"இளங்கன்று பயமறியாது" என்று சொல்கிற வசனப்படி அதிபால்யவயதுக்குரிய பயமின்மையோடு, தான் சரியாக நடந்துகொள்கிறதாக அவனுக்குத் தெரிந்திருந்ததனாலுண்டான மனோதிடமும் சேர்ந்துகொள்ள, பாப்டிஸ்ட், அப்பணவியாபாரி அதட்டினதைக்கண்டு பயந்தோடாமல், அவ்வறைக்குள் இன்னும் இரண்டடி முன்வைத்துச்சென்றான். சென்றவன் பேசத் தாமதிக்காமல, " ஐயா," என்று ஆரம்பிக்கவே, அவனை வெளியில் தள்ளும்படி உத்தரவுசெய்ய வாயெடுத்த பணவியாபாரி அவன் துணிவையும் தைரியத்தையும் பார்த்து அதிசயமுற்று ஒருக்ஷணநேரம் சும்மாவிருக்க, அந்தச் சமயத்தில் பாப்டிஸ்ட் " ஐயா, நான் தெரியாத்தனமாக உங்களை ஏமாற்றிவிட்டேன். ஆனால் அது தெரியாத்தனமாகச் செய்யப்பட்டதால் உங்களுக்கு நான் செய்தகுற்றம் குறைந்துபோகவில்லை." என்று ஆரம்பித்தான். இவன் இப்படி முன்னுரைகூறியதைக்கேட்டுப்

பணவியாபாரி மிகவும் அதிசயமுற்று நின்றான். அவன் அப்படி தயங்கிநின்ற சமயத்தை மேற்கொண்டு பாப்டிஸ்ட் இன்னும் சில அடிகள் முன் சென்று அங்கிருந்த ஒரு மேஜையின்மேல் தன் சொக்காய்ப் பையிலிருந்து பணத்தைக்கொட்டி, "நீங்கள் சற்றுமுன் எனக்குக்கொடுத்த நாநூற்றி ஐம்பது வராகன்களும் இதோ இருக்கின்றன; உங்கள்பணத்தை யெடுத்துக்கொண்டு, நான் கொடுத்த ரசீதைத் திருப்பிக்கொடுக்கும்படியான தயவு செய்யவேண்டும். நான் தங்களுக்குக் கொடுத்த துணியின்விலை கஜம் ஒன்றுக்கு 15-வராகனுக்கு பதிலாக எட்டேவராகன் தான் பெறுமானது. 8-வராகன் விகிதம் 30-கஜம் 240-வராகன்தானாகிறது; பாக்கி 210-வராகன் உங்களுக்குத் திரும்பிக்கொடுக்கப்படவேண்டியது. ஐயா, அந்த வராகன்களா அதோ இருக்கின்றன. தயவுசெய்து சரியாகவிருக்கிறதா எண்ணிப்பார்க்கவேண்டும்." என்றான்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் அப்பணவியாபாரி, தன்குரலை மாற்றிக்கொண்டு "அப்பா, நண்பனே, நீ சொல்வது நிச்சயந்தானா தெரியுமா? அதில் பிசகொன்றுமில்லையென்று உனக்கு உறுதியாகத் தெரியுமா?" என்று இதமாகக் கேட்டான்.

"ஐயா, அந்தத்துணி இன்னும் உங்களிடத்தில்

தானேயிருக்கிறது ; அதில் நெ. 3. குறிக்கப்பட்டிருக்கிறதோ இல்லையோ?" என்றான் பாப்டிஸ்ட்.

காமாட்டி துணியைப் பார்க்கப்போய் "ஆம்" என்று சொன்னான்.

"ஐயா, 3-ம் நெ. துணி 8-வராகன் விலை குறிக்கப்பட்டிருக்கிறது. அதில் பிசகொன்றுமில்லை. ஐயா, உங்கள் வார்த்தையை மீறிக்கொண்டு உங்களிடம் வந்ததற்காக என்னை மன்னிக்கக் கேட்டுக்கொள்கிறேன் ; இந்தப் பிழையை எனக்குமுன்னால் நீங்கள் கண்டுபிடித்திருப்பீர்களானால் என் மனது ஒருபோதும் சமாதானப்பட்டிராது. உங்கள் பணத்தை உங்களிடம் கொடுத்துவிட்டேன்; இனி தங்களுக்கு வந்தனஞ்சொல்லி விடைபெற்றுக்கொள்கிறேன்" என்றுசொல்லி பாப்டிஸ்ட் வெளியேபோகப் புறப்பட்டான்.

அவருக்குத் தலைவணங்கித் திரும்பிப்போகப் புறப்பட்ட பாப்டிஸ்டைப் பார்த்து மான்ஷியர் சின்னணி "ஒருநிமிஷமிரு, ஒரேநிமிஷம்!" என்று சொல்ல, கதவண்டைசென்ற பாப்டிஸ்ட் இவ்வார்த்தைகளைக் கேட்டு உடனே திரும்பிவந்து அவர்முன் நின்றான். அவனைப்பார்த்து அப்பணவியாபாரி எனக்கு துணிவிஷயங்களில் தாரதம்யம் பார்க்கத் "தெரியாதென்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

அதற்கு பாப்டிஸ்ட் "ஐயா, அந்தத்துணி கஜ

ம் 8-வராகனுக்குமேல் விலைபெறாது என்று நான் உங்களுக்கு உறுதியாய்ச்சொல்ல மாட்டுவேன்'' என்றான்.

சூதுவினையற்ற அவன் மறுமொழியைக்கண்டு புன்சிரிப்புச் சிரித்துக்கொண்டு அப்பணவியா பாரி, "அப்படியிருக்க, இந்தப்பணத்தை நீ உன க்கே வைத்துக்கொள்வது இலகுவாயிருக்குமே'' என்றான்.

அச்சிறுபையன் தந்திரமற்ற வெகுளித்தன் மையோடு "அதைப்பற்றி நான் நினைக்கவேயில் லை, ஐயா.'' என்றான்.

"அதைப்பற்றி நினைத்திருந்தால்?'' என்று பாரிஸ் நகரத்துச் சிங்காரபுருஷனை அப்பண வியாபாரி அவனை விசாரித்தான்.

"அப்படிப்பட்ட எண்ணம் என்மனதில் உதி ப்பது முற்றும் கூடாத விஷயமாயிற்றே. அதை விட இங்கேயிருக்கும் உம்முடைய சாமான்களை யெல்லாம் எடுத்துக்கொண்டுபோக எண்ணினால்? என்று கேட்கலாமே.'' என்று பதிலுரைத்த போதே அவன் முகத்தில் ஒரு புன்சிரிப்புத் தோன்றி புத்திவிசாலமான அவன் முகவிலாசத் தைப் பிரகாசிக்கச்செய்தது. அப்படிப்பட்ட வை த்திய எண்ணம் ஒருவனுக்கு எப்படித்தோன்றக் கூடுமென்று தனக்குள் சிரித்துக்கொண்டவன் போல் காணப்பட்டான்.

"எல்லாரும் அதிசயிக்கத்தக்க விதமாய் அவ்வளவு நேர்மையோடு நீ திருப்பிக்கொடுத்த அந்தத் தொகையை நான் உனக்கு ஒரு வெகுமானமாகக் கொடுத்தேனென்றால்?" என்று பணவியாபாரி பின்னும் கேட்டதற்கு,

"அதை வாங்கிக்கொள்ள எனக்கு என்ன பாத்தியமிருக்கிறது? மேலும் அதை நீர் ஏன் எனக்குக் கொடுக்கவேண்டும்? அப்படியே கொடுத்தாலும் நான் அதைப் பெற்றுக்கொள்ளமாட்டேன், ஐயா" என்று கொஞ்சங்கூடத் தயங்காமல் பாப்டிஸ்ட் பதிலுரைத்தான்.

இளம்பிராயமுள்ள அந்தப்பணவியாபாரி பாப்டிஸ்ட் சொன்ன பதிலுரைகளைக்கேட்டு அடங்கா மகிழ்ச்சி கொண்டவனாய் அவனை நோக்கிச்சென்று அவன் கையைப் பிடித்துக்கொண்டு "நீ ஒரு நேர்த்தியான பையன்? நல்ல நாணயமான பையன்" என்று ஒருதரத்தைப்போல் இரண்டுதரம் சொல்லிக்கொண்டாடி "உன்பேர் என்ன?" என்று இனிமையாய்க் கேட்டான். அவன் இப்படி கடாக்ஷித்துப் பேசினதைக் கண்டு பாப்டிஸ்ட் சங்கோசத்தால் முகம் சிவந்து அவன் கேட்ட கேள்விக்கு உத்தரமாக "தங்கள் ஊழியன் ஜீன் பாப்டிஸ்ட் கோல்பெர்ட்" என்றான்.

அதன்மேல் அப்பணவியாபாரி "பாப்டிஸ்ட், உன்வயது என்ன?" என்று கேட்டான்.

"பதினைந்து, ஐயா." என்றான் பாப்டிஸ்ட்,

மான்ஷியர் சின்னுணி "கோல்பெர்ட்" என்கிற பெயரைக் கேட்டதும் ஏதோ மறந்துபோனதை ஞாபகப்படுத்திக்கொள்ள யோஜிப்பவன்போல் 'கோல்பெர்ட், கோல்பெர்ட்' என்று தானே சொல்லிக்கொண்டு பிறகு அந்தப்பையனைப்பார்த்து "நீ ஸ்காத்லாந்து தேசத்து கோல்பெர்ட் குலத்தினரைச் சேர்ந்தவனயிருக்கலாமோ?" என்று கேட்டான்.

"ஸ்காத்லாந்துதேசத்து கோல்பெர்ட் குலத்தினர்க்கும் பிரான்சுதேசத்து கோல்பெர்ட் குலத்தினர்க்கும் 'காஸில்ஹில் பிரபுக்கள்' பொதுவான மூதாதைகள், ஐயா" என்று பாப்டிஸ்ட் பதில் சொல்லவும், பணவியாபாரி "அப்படியானல் அவ்வளவு பேர்போன குலத்திலுதித்த உன் தகப்பனர் துணிவியாபாரியானது எப்படி?" என்று கேட்டான்.

அதற்கு பாப்டிஸ்ட் "ஐயா, என்தகப்பனர் துணிவியாபாரியல்லர்; ஆனல் அவர் மெத்த ஏழை; ஆதலால், அவருக்குப்பாரமாயிருக்கக் கூடாதென்று நான் எனக்கு நாமகரணமிட்டவரான மான்ஷியர் சாத்தாணியிடம் வேலைக்கிருக்கிறேன்" என்றான்.

"ஏழைச்சிறுவன், எவ்வளவு வெகுளித்தனம், எவ்வளவு யதார்த்தம், எவ்வளவு இனியகுணம்

இவை யெல்லாவற்றுடன் எவ்வளவு துர்ப்பாக்கியம், பாபம்: பரிதாபம்! பரிதாபம்!!" என்று தனக்குத் தானே அப்பணவியாபாரி சொல்லி மனதுருகிக் கொண்டிருக்கையில், அவனுடைய கையாள் 'காமாட்டி' யென்பவன்வந்து "ஐயா, வண்டி தயாராகி நிற்கிறது" என்று சொன்னான்.

அப்பணவியாபாரி விசனத்தோடு அப்பையன் கையை விட்டுவிட்டு, இன்னும் அங்கேயுள்ள மேஜையின்மேல் அப்படியே கிடந்த பணத்தை அவனுக்குக் கொடுத்து ஏற்றுக்கொள்ளும்படி செய்ய வேண்டுமென்கிற விருப்பமும், அதைக் கொடுத்தால் அவன் மனம் புண்பட்டு, அவ்வளவு அழகும், மேன்மையுமான முகத்தைக் கடுக்கச்செய்யுமோ என்கிற பயமும் அவன் மனதுள்ளிருந்து தடுமாற, இன்னது செய்வதென்று நிதானிக்கமாட்டாதவனாய்ச் சற்றுநேரம் தயங்கினின்றான். கடைசியில் அவனுக்கு வருத்தம் உண்டுபண்ணுவோமே என்கிற பயமே மேலிட்டதாகத் தோன்றுகிறது. ஏனென்றால் உடனே அவன் "நாம் மறுபடியும் சந்திப்போம், பாப்டிஸ்ட்; நாம் மறுபடியும் சந்திப்போம்" என்று சொல்லி பக்ஷமுள்ள பார்வையோடும் மற்ற பிரீதிக் குறிகளோடும் அவனை விடைகொடுத்து அனுப்பிவிட்டான். பாப்டிஸ்ட் அந்த ஹோட்டலின் மாடிப்படிகள் வழியாய் இறங்கியோடிவந்து தெருவில் குதித்த

தும் குதிக்காததுமாயிருக்கையில், யாரோ பல
மாக, பயமுறுத்திக்கொண்டு அவன்கழுத்தில் கை
போட்டு அவனை உறுதியாகப் பிடித்துக்கொண்ட
தாகக் கண்டான். அப்படிப் பிடித்துக்கொண்டது
அவனுடைய எஜமானாகிய கோபாவேசங்கொண்ட
துணிவியாபாரி சாத்தாணியே தவிர வேறொரு
வருமில்லை.

அக்கிழவியாபாரி பாப்டிஸ்ட் தன் கடையை
விட்டுக் குதித்தோடிவந்ததைக் கண்டு மலைத்து
நின்றவன் பின்பு அவன்பேரில் கோபாவேசங்
கொண்டு "அந்தப் பயலைவிட்டேனா, பார்!" என்
று அவனைத் தேடிக்கொண்டுவந்தான். ஹோட்
டல்வாசலில் பணத்தைக்கொடுத்துவிட்டுத் திரும்
பிவந்த பாப்டிஸ்ட் அவன்முன் எதிர்ப்படவே,
அவன் கோபம் முன்னிலும் அதிகமாகப் பொ
ங்க அவன் அச்சிறுவனைக் கழுத்தில் கை போ
ட்டுப் பிடித்துக் கொண்டு பைத்தியம் பிடித்த
வன்போல அவனை வையத் தொடங்கினான்.
ஏழை பாப்டிஸ்ட் அவன் வைவதுசரியல்ல
வென்று ஆக்ஷேபித்துச் சமாதனம் சொன்ன
தொன்றும் பலிக்கவில்லை. சாத்தாணி மோ
சத்தத்தில் அதிக கெட்டவனல்ல; ஆனால், அவன்
மெத்த பேராசையுள்ளவனும் முன்கோபியுமாயி
ருந்தான். இவ்விரு தீக்குணங்களும் சேர்ந்து
கொண்டு அந்த சமயத்தில் அவன்கடமை இன்னு

தென்று தெரியாமல் மறந்துபோகும்படிச்செய்து விட்டன. ஆகவே, ப்பாப்டிஸ்ட் நியாயமாகச் சொன்ன விவரங்களுக்கு மறுமொழியாக அவ்ன் அச் சிறுவனைப் பார்த்து, " என் வேலையை விட்டுவிட்டு என் கண்ணிற்படாமல் போ; தொலை, நான் உனக்குச் சொல்கிற கடைசிவார்த்தை இதுதான் : அதைக்கேட்டு அந்தப்படி நட. இனிமேல் என் கை அல்லது வாய்க்கெட்டும் தூரத்தில் ஒருபோதும் வராதே. உனக்கு அதுதான் என்னுடைய ஆசீர்வாதம். அதை வாங்கிக்கொண்டு சுகமே போய் வா, போ!" என்று அவனைப்பிடித்துத் தள்ளினான்.

பாப்டிஸ்ட் அவனுடைய எஜமான் கோபாவேசம் கொண்டு கூத்தாடுவானென்று எதிர்பார்த்தவனாயிருந்தாலும், இப்படி அவன் தன்னை வேலையைவிட்டுத் தள்ளுவான் என்று ஒருக்காலும நினைக்கவேயில்லை. இருந்தாலும், அந்த சந்தர்ப்பத்தில் தான் வேறு செய்யத்தக்கது ஒன்றுமில்லையென்றுணர்ந்து, அவன் தான் நடந்துகொண்டதற்காக மனஸ்தாபப் படாமலிருந்தான். அவன் தனக்கு நாமகரணமிட்டதால் ஒருவிதத்தில் பிதாவென்றுமதித்துவந்த அக்கிழவன் இப்படி அடாதபடியாகத் தன்னை அடித்துத் துரத்தியதற்குத் தலைவணங்கி தன் தகப்பனார்வீடு நோக்கி மனங்குழைய மெதுவாய் நடந்துசென்றான்.

## III.

சாயங்காலம் 7 மணி நேரம் இருக்கும். விளக்கு வைத்து இரண்டு நாழிகை ஆய்விட்டது. பாப்டிஸ்டினுடைய தகப்பனார் வீட்டில் மான்ஷியர் கோல்பெர்ட்டும் அவருடைய மனைவியும் அவர்களுடைய இளைய புத்திரனை 6-வயதுக் குழந்தையோடு சாப்பாட்டுக்கு சித்தமாக உட்கார்ந்துகொண்டிருந்தார்கள். அப்பொழுது மூடியிருந்த அவர்களுடைய சாப்பாட்டு அறையின் கதவைத் திறந்துகொண்டு பாப்டிஸ்ட் உள்ளேவந்தான். அவன் வந்தபொழுது அவன்முகம் கலங்கி மனம் குழம்பியிருந்த மாதிரியைப் பார்த்துவிட்டு அவனுடைய தாயார் தகப்பனார் இருவரும் பயந்து பிரமித்துப்போனார்கள். உடனே இருவரும் "என்ன சமாசாரம்? வேலையுள்ளநாளில் ஏன் கடையை விட்டு வந்துவிட்டாய்? கடைக்கார சாத்தாணிக்கு உடம்பு சரியில்லையோ? அல்லது உனக்குத்தான் உடம்பு சரியில்லையோ, என்ன சமாசாரம்? ஏன் வந்தாய்? சொல்!" என்று கேள்விமேல் கேள்வியாகக் கேட்டார்கள்.

அவர்கள் கேட்ட இந்தக் கேள்விகள் இராமபாணம் தொடுத்தாற்போல் சரசரவென்று ஒன்றின் மேலொன்று வெகுவேகமாய்த் தொடர்ந்து வந்தமையால் அச்சிறுவாலிபன் அவைகளுக்கு பதில்சொல்ல ஒரு நிமிஷம்கூடவின்றித் தயங்கி

நின்றான்; ஆனால் அவர்கள் சொன்ன கடைசி வார்த்தைக்குப் பின் ஒரு பெருமூச்சுவிடவே, அந்த சமயத்தை மேற்கொண்டு "மான்ஷியர் சாத்தாணி என்னை வேலையைவிட்டுத் தள்ளிவிட்டார்" என்று சொன்னான் பாப்டிஸ்ட்.

அவனுடைய தகப்பனார் மான்ஷியர் கோல்பெர்ட் என்பவர் இவ்வார்த்தைகளைக் கேட்டதும் தன் பிள்ளையின் நடத்தையைச் சோதிக்கும் கண்டிப்பில் ஒரு நிமிஷத்துக்கு தகப்பன் பிள்ளையென்கிற உறவைத் தள்ளிவைத்துவிட்டு "அப்படியானால் நீ ஏதோ திரிசமம் செய்திருக்கவேண்டும்! துரையவர்களுக்கு சரியாக நடந்துகொள்ளக் கூடவில்லையாக்கும்!" என்றார்.

அதற்கு பாப்டிஸ்ட் அதிக தாழ்மையோடு "அப்பா, நான் செய்தது சரியோ தப்பிதமோ அதை நீங்கள் தீர்மானித்துச் சொல்லவேண்டும்." என்றான்.

அதற்குள் மான்ஷியர் கோல்பெர்ட் கோபத்தோடு "என்னடா அது? நீ சொல்வது ஒன்றும் அருத்தமாகவில்லையே!" என்று கேட்டார்.

"என் பிரியதந்தையே, உங்கள் உத்திரவுப்படி, இன்றைக்கு நடந்தவற்றை யெல்லாம் நான் தங்களுக்குச் சொல்கிறேன்; அதைக் கேட்டபின் நான் பிசகுசெய்திருந்தால் சொல்லுங்கள். என் புத்திக்கேற்க நான் செய்தது பிசகு என்று

தோன்றவில்லை. ஏனெனில், இந்தக் கதியடைந்து தங்கள் முன் வந்து நிற்பது எனக்கு எவ்வளவு தான் மனவருத்தம் உண்டுபண்ணுவதா யிருந்தா லும், நடந்த காரியங்களை மறுபடியும் அடியிலிரு ந்து தொடங்கிச் செய்யச் சொன்னால் இப்பொழு து எப்படி நடந்துகொண்டேனோ அப்படியே மறுபடியும் நடந்துகொள்வேன்!" என்றான்.

"சரி, மேலேசொல், கேட்போம்" என்றார் அவனுடைய தகப்பனார். அவனுடைய தாயார் அவனைப் பார்த்து தைரியமூட்டினாள். அவன் சிறு தம்பி அம்மாள்பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு அண்ணாவுக்கு கையைக்காட்டி முத்தம்கொடுத்துக் கொண்டிருந்தான். இதை வாசிப்போர்க்கு ஏற்கனவே தெரிந்துள்ள விஷயங்களையெல்லாம் பாப்டிஸ்ட் விடாது நடந்தது நடந்தவாறு எடுத்துரைத் தான்.

அவன் சொன்னதில் எவ்வளவு கபடின்மை, எவ்வளவு வெகுளித்தனம்! ஒருவார்த்தை அதிகப்படி இருக்கவேண்டுமே! இல்லை. ஒரு நிந்தை மொழி உபயோகிக்கவேண்டுமே! கிடையாது. சாத்தாணி செய்த கொடுமைகளை எடுத்துரைக் கையில் அந்த இனியபையன் நிந்தைமொழி ஒன் றும் உபயோகிக்காததன்றி, வாஸ்தவத்தில் அக் கிழவியாபாரியின் நடத்தை அவன்மனதுக்கு எவ் வளவு வெறுப்பாக விருந்தாலும், அவனுடைய

நடத்தைக்கு ஏதாவது முகாந்திரங்கள் தேடி அவன்பேரிலுள்ள குற்றத்தைக் குறைக்கப்பார்த்தான். சாத்தாணி அவனைக் குரூரமாய் நடத்தி வேலையைவிட்டுத் தள்ளின சங்கதியைத் தகப்பனுருக்குச் சொன்னதும் அக்கிழ வியாபாரியின் குற்றத்தைக்குறைக்குமாறு பின்னும் அவன் சொன்னதைக்கேளுங்கள்: "என் *ஞானத்தகப்பனுக்கு பணத்தின்மேலுள்ள ஆசைக்கு அளவு இல்லை. அவர் துணிவியாபாரியாதலால் ஒருக்கால் என்னுடைய நடத்தை அவருக்குத் தெரியவில்லையாக்கும். பெறுமான விலைக்குமேல் கொஞ்சம் அதிகமாக விற்கிறதும் ஏராளமாய் அதிகலாபம்வைத்து விற்கிறதும் இரண்டும் அவருக்கு ஒன்றேபோலும். ஒருவன் கள்ளன் என்றுபேர் வாங்காமலும், கள்ளத்தனத்துக்காக தண்டிக்கப்படாமலும் கஜத்துக்கு 2-அணா லாபம்வைத்து விற்கலாமென்றால் அதேபேர்வழி அவனால் கூடுமானால் கஜத்துக்கு 100 ரூபாய் லாபம் வைத்து ஏன்விற்கலாகாது? அதற்கு என்னசொல்கிறீர்கள், அப்பா? அப்படி நியாயம்பேசுவது மிகவும் விசனிக்கத்தக்கதுதான். ஆனால் விஷயமிருக்கிறது

---

* கிறிஸ்தவர்களுக்குள் குழந்தைபிறந்தபின் அதற்கு ஞானஸ்நானம் செய்வித்து நாமகரணமிடும்பொழுது கூடவிருந்து பெயரிடுவோர்க்கு ஞானத்தகப்பன், அல்லது ஞானத்தாய் என்று சொல்லுகிறது.

அப்படித்தானே: அதற்கு நாம் என்ன செய்கிற து!" என்றான்.

தன் மகன்வாயிலிருந்து வந்த இந்தவார்த்தைகளை க்கேட்டு உள்ளுக்குள் அடங்கா மகிழ்ச்சிகொண்ட மான்ஷியர் கோல்பெர்ட் தன் கைகளை நீட்டிக் கொண்டு "இங்கே வாடா மகனே, என்னைக்கட் டிக்கொள்" என்று சொல்ல, பாப்டிஸ்டும் அவர் கரங்களில்வந்து விழுந்தான். தன்கரங்களில்விழு ந்த மகனைக் கட்டியணைத்து முத்தம்கொடுத்து "அப்பா, என்மகன் என்றால் நீதான். நீ நன்றாய் நடந்துகொண்டாய்; நீசெய்தது அவ்வளவும் என க்குப் பூர்ணசம்மதம்." என்று கொண்டாடினார். அதற்குள் பக்கத்திலுள்ள அவன்தாயார் அவள் கைகளை நீட்டிக்கொண்டு "என் கண்ணுனை பாப் டிஸ்ட் இங்கேவா, நீ உண்மையில் நன்றாய் நடந் துகொண்டாய், நீசெய்தது சரி. இங்கே என் பக்கத்தில் உட்கார்ந்துகொள். அவ்வளவு தூரம் நடந்துவந்தாயே; பசியாகவிருக்கும், சாப்பிடலா ம் வா. இனிமேல் நீ அந்தமனிதனிடம் திரும்பிப் போக விடேன். இது நிச்சயம்" என்றாள்.

பாப்டிஸ்ட் அவனுடைய தாயாருக்குப் பக்கத் தில் உட்கார்ந்துகொண்டு, "அங்கே போகாவிட் டாலும், நான் உங்களுக்கு பாரமாக சும்மா இரு க்கப்படாது அம்மா." என்றான். "அதைப்பற் றி நாளை யோசிப்போம். இன்றைக்கு அந்தத்

துணிவியாபாரி எங்களுக்கு ஒரு விருந்ாளியை அனுப்பவேண்டுமென்று தெய்வாக்கினை யிருந்த படி வந்த நல்ல அதிதியை உபசரித்துக்கொண் டாடும் வகையைப் பற்றிமட்டும் நினைப்போம். வேறுகவலைவேண்டாம்" என்றார் மான்ஷியர் கோல்பெர்ட். இப்படி எல்லாரும் சந்தோஷமாக போஜனத்திற்கு சித்தமாக உட்கார்ந்திருக்கையில் அந்தவீட்டிலுள்ள ஒரே வேலைக்காரியான ஜேன் என்பவள் வந்து "ஐயா, தெருவில் ஒரு கனவான் தபால்வண்டியில் உட்கார்ந்துகொண்டிருக்கிறார். அவர் தங்களோடு பேசவேண்டுமென்று சொல்கிறார்." என்றாள்.

"அவருடைய பேர் என்ன ஜேன்?"

"அவரை உங்களுக்குத் தெரியாதாதலால் அவருடைய பேரைச்சொல்வதில் பிரயோஜனமில்லை என்கிறார். ஆனால் அவர் தங்களைப் பார்க்க வேண்டுமென்று அதிக ஆவலாயிருக்கிறார்."

"அவர் எனக்குத் தெரியாதவராயிருந்தாலும் அவரைப் பார்க்கமாட்டேன் என்று சொல்ல யாதொரு நிமித்தமுமில்லை. ஆகையால் அவரை உள்ளேவரச்சொல்" என்று சொல்லிவிட்டு, வந்தவரை மரியாதைசெய்துபசரிப்பதற்காக அவருடைய நாற்காலியைவிட்டு எழுந்து நின்றார்.

வெளியிலிருந்து உள்ளேவந்த அந்நியர் பாரிஸ் நகரத்திலிருந்து வந்தவரென்று தெரியும்படி

பட்டணத்து மாதிரியெல்லாம் அதிகமாக அவர் நடை உடை பாவனைகளில் விளங்க, டம்பமாய் உள்ளே வருகையில், அவரைப்பார்த்ததும் பாபடிஸ்ட் முகத்தில் அதிகமாக இரத்தம் சுரந்தது.

அந்த அந்நியன் பாப்டிஸ்டினுடைய தகப்பனுருக்கு வணக்கம்செய்து, கோல்பெர்ட் பெருமாட்டி முன்வந்ததும் தரைமட்டும் குனிந்து அந்த அம்மாளுக்கு வணக்கமாய் மரியாதை செய்துவிட்டு, பின்னும் அவன் தகப்பனுரைப் பார்த்து "ஐயா, நான் இப்படி அவசரமாக உள்ளேவந்ததற்கு ஆயிரந்தரம் மன்னிப்புக்கேட்டுக் கொள்கிறேன். ஆனால் நான் நாளைக்கு ஊருக்குப் போகிறேன்; தங்களோடு பேசவேண்டுமென்று நான் வந்தகாரியம் தாமதிக்கத் தக்கதாகவில்லை. என் பேர் மான்ஷியர் சின்னுணி. பாரிஸ்நகரத்து 'சின்னுணி அண்ட் மாஜுராணி' என்னும் வியாபாரக் கம்பெனியில் நான் ஒரு முதலாளி" என்றான்.

மான்ஷியர் கோல்பர்ட் வந்தவருக்கு ஒரு நாற்காலி கொடுத்து உட்காரச்சொல்லியுபசரித்து "நான் தங்களுக்கு எந்தவிதத்தில் உதவிபுரியக் கூடும்?" என்று கேட்டார்.

அவர் பாப்டிஸ்டைக்காட்டி "இந்தவாலிபன் தங்களுடைய புத்திரன்தானே, இல்லை?" என,

"ஆம், ஐயா, கடவுள் அனுக்கிரகம்" என மான்ஷியர் கோல்பெர்ட் மறுமொழிசொன்னுர்.

"கடவுள் கிருபை உங்களுக்கு இருக்கிறதுநான்: இந்தக்குழந்தை இன்று காலமே என்னிடத்தில் நடந்துகொண்ட மாதிரி உண்மையில் மேன்மையாகவேயிருந்தது."

கோல்பெர்ட் பெருமாட்டி தன்பிள்ளை அவன் கடமையைச் செய்ததைப்பற்றி கர்வம் அடைந்துவிடப்போகிறானென்று பயந்து "அவன் நடந்துகொள்ளவேண்டிய கடமைப்படி நடந்துகொண்டானேயன்றி அதில் விசேஷம் ஒன்றுமில்லை" யென்று சுறுக்க மறுமொழிசொன்னாள்.

"இல்லை, அவன் நடத்தை மேன்மையாகவேயிருந்தது, அம்மா. உங்களுக்கு சங்கதியெல்லாம் தெரியும்போலிருக்கிறது. ஆனால் இது சங்கதி நீங்கள் அனேகமாய் உங்கள் பிள்ளை சொல்லிக் கேட்டிருப்பீர்களாதலால் எனக்கு மிகவும் சந்தோஷமுண்டுபண்ணினது எதுவோ அதை அவன் தங்களிடம் சொல்லியிருக்கமாட்டானென்று நினைக்கிறேன். நான் இன்னொருதுணி வாங்க வேண்டி சாத்தாணிகடைக்குப் போனேன். அப்பொழுது அங்கிருந்த வேலைக்காரன் எல்லா விவரங்களையும் எனக்குச் சொன்னான். அம்மா, யாவரும் மெச்சத்தக்க தங்கள் பையன் அந்தத் துணியை என்னிடம் அதிகவிலைக்கு விற்றதால் வந்த அதிகப்படித்தொகையை அவன் எஜமானோடு பங்கிட்டுக்கொண்டுபோக மறுதலித்து

விட்டான்." என,

"பேஷ், பேஷ்! சரி, சரி, முற்றும்சரி! என்னருமைச்செல்வம்!" என்று தன்புதல்வனைத் தழுவிக்கொண்டு பெருமையும் சந்தோஷமும் பொங்க சேல்பெர்ட் பெருமாட்டி பூரித்துப்போனாள். பாப்டிஸ்ட் காக்குழற "அப்படிச்செய்தால் அது யோக்கியமாகாது" என்றான்.

மான்ஷியர் கோல்பெர்ட்டும் அந்த வார்த்தைகளைக்கேட்டு மனம்பூரித்துப்போனார்.

உடனே அவர் பணவியாபாரியைப் பார்த்து, "ஐயா என்மகன் அவனுடைய இந்த நடத்தைக்காக சத்தாணிகடையில் வேலையாகவிருந்ததிலிருந்து தள்ளிவிடப்பட்ட சங்கதி உங்களுக்குத் தெரிந்திருக்குமே" என,

"அது எனக்குத்தெரியும்; கடைவேலைக்காரன் சொன்னான். அதனாலேதான் இங்கேவந்து, நீங்கள் உங்கள் புத்திரனை ஏற்கனவே வியாபாரத்தொழிலில் பிரவேசிக்க விட்டுவிட்டபடியால் நாணயமும் கண்யமுமுள்ளவனாயிருக்கிற அவனை எங்கள் 'பாங்கியில்' வேலைபார்க்கும்படி அனுப்ப உங்களுக்கு ஏற்குமோவென்று கேட்டுப் போகலாமென்று வந்தேன். அங்கேயிருந்தால் அவன் நல்லஸ்திதிக்குவர அதிக இடமுண்டு. அம்மா, உங்கள் மையன் மிகவும் மேலானஸ்திதிக்கு வருவானென்பதற்குச் சந்தேகமில்லை; நான் சொல்

லுகிறேன், பாருங்கள்" என்றார் அப்பணவியா பாரி.

தன்பிள்ளை நல்ல மேலானஸ்திதிக்கு வருவா னென்று சொல்லக்கேட்ட கோல்பெர்ட் பெருமா ட்டி மனஉருக்கத்தோடு "ஐயா, உம்மைக் கட வுள் ஆசீர்வதிப்பார்." என்று அவரை வாழ்த்தி னார்.

இதுவரையில்பேசாமல் கேட்டுக்கொண்டிருந்த பாப்டிஸ்ட் இப்பொழுதுதான் மான்ஷியர் சின்ஞ ணியின் நோக்கத்தை அறிய ஆரம்பித்தான். உட னே அவன் அப்பணவியாபாரியைப் பார்த்து: "நான் ஆஸ்திவந்தனுகும்பொருட்டு என தாய் தந்தையரைவிட்டுப் பிரியவேண்டுமானுல் அப் படிப்பட்ட வேலை எனக்கு வேண்டாமென்று மறுதலிக்கவேண்டியவனுயிருக்கிறேன் ஐயா." என்றான். "ஆனுல் அதை நான் உனக்காக மறு க்கவில்லையப்பா? பாப்டிஸ்ட்" என்று அவன் தகப்பனுர் பிரீதியோடும் கவலையோடும்சட்டெ ன்று மறுமொழி சொல்லி அவன் வாயை அடக் கிவிட்டுப் பின்னும் சொல்கிறுர்: "அப்பா, மக னே, நாம் மிகவும் ஏழைகளாகவிருக்கிறும். உ ன்னைப்போலொத்த புத்திசாலியை நாங்கள் இந்த நாட்டுப்புறப் பட்டணத்தில் மனுவிந்தி செல் வவிர்த்திக்கு அதிகமான போக்கற்றஇடத்தில் முடக்கப்போட்டுவைத்துக்கொண்டிருந்தால் அது

என் மனதுக்கே குற்றமாகத்தோன்றும். இந்த கனவான் உன்னுடைய குணத்தை மதித்து உன்னைத் தேடிக்கொண்டு இவ்வளவுதூரம் வந்திருக்கிறபடியால் அவர் என் நம்பிக்கைக்கு முற்றும் பாத்திரராயிருக்கிறார். ஐயா, இதோ அவனை உங்களுக்குக் கொடுத்தேன். என்னுடைய குலக்கொழுந்தை உங்களிடத்தில் ஒப்புவிக்கிறேன். நீங்கள் அவனை அழைத்துக்கொண்டுபோக இருக்குமிடம் ஒரு பெரிய நகர். அங்கே அவனைப் பாதுகாப்பார் ஒருவருமில்லை. ஆகையால் அப்பெரியநகரில் அவனை—ஒரு தகப்பனைப்போல் என்றுசொல்ல உங்களுக்கு வயதுபோதாது, வெகு பால்யராயிருக்கிறீர்—ஒரு சகோதரனைப்போல் கிட்டவிருந்து பாதுகாத்து வரவேண்டும். அப்பா, பாப்டிஸ்ட், இந்த கனவானோடு கூடப்போ ; உன் தொழில்சம்பந்தமான எல்லாவிஷயங்களிலும் அவருடைய புத்திமதியைக் கேட்டு அந்தப்படி நட ; ஆனால் யதார்த்தமுறை, கண்ணியம், சன்மார்க்கம் இவை சம்பந்தப்படும் விஷயங்களில் உன்னுடைய மனதே உனக்குப் புத்திசொல்லும் மந்திரியாக இருக்கட்டும்."

பாப்டிஸ்ட் தன் தகப்பனார் சொன்னவார்த்தைகளைக் காதுகொடுத்துக் கேட்கையில் கண்ணீர்விட்டழுதான். ஆனால் அவன் அவர்களைவிட்டுப் பிரிந்து போகமாட்டேனென்று முன்போல் ஆ

சேஷபிக்கவில்லை. அவனுடைய பெற்றோர்க்குப் பாரமாயிருக்கக் கூடாதென்கிற எண்ணமும், அவனுடைய குடும்பத்துக்கு உதவிபுரிய உபயோகமுள்ளவனாய் இருக்கவேண்டுமென்கிற விருப்பமும் சேர்ந்து சிக்கிரத்தில் அவன் அழுகையை நிறுத்திவிட்டன. ஆனாலும் அவன் ஊருக்குப்போக விடைபெற்றுக்கொண்டது மிகவும் விசனகரமாகவேயிருந்தது.

பாப்டிஸ்ட் இத்தனைவருஷகாலமாகப் பிறந்து வளர்ந்து சீராட்டப்பெற்ற அந்த வீட்டையும் அவன் பெற்றோர்களையும் மற்றவர்களையும் விட்டுப் பிரிந்துபோகவேண்டுமென்று நினைத்தபொழுது அவன் இளமனம் துடித்து உருகிப்போயிற்று. அந்தவீட்டில் அவனுக்கு அருமையாகத்தோன்றாதது ஒன்றில்லை. எதைப்பார்த்தாலும் அவன் மனதுக்கினிமையான பழைய ஞாபகம்வந்து அவ்வளவு சந்தோஷமாய் இருந்தவிடத்தை விட்டுப் பிரிந்து போகவேண்டுமே யென்று அவன் மனதைத் துன்பப்படுத்தும். வேலைக்கார ஜேன் என்னும் கிழவியைவிட்டுப் பிரிவதுகூட அவனுக்கு மகா விசனமாகவிருந்தது.

பாப்டிஸ்ட் பாரிஸ் நகருக்குப்போகப் பிரயாணமானதும், அவன் இளம்பிராயத்திற்கியல்பாயுள்ள மனவெழுச்சியாலும், வழியில் விதம்விதமாகத்தோன்றிய நூதனக் காக்ஷிகளாலும், இடமாறு

தலாலும் அவன் விசனமெல்லாம் அவனைவிட்டுப் பறந்தோடிவிட்டது. தன்னைப்போல் இளம்பிராயமும் சந்தோஷ சுபாவமுமுள்ள அந்தப் பணவியாபாரியோடு உட்காரச் சௌக்கியமாயிருந்த பேஷான குதிரைவண்டியில் அவன் வேகமாய்ச் சவாரிபோகையில், அவன் தனக்குள்ளே இதற்கு முன்னுணராத ஒரு புதிய உற்சாகம் உண்டாகக் கண்டான்.

இதைவாசிக்கும் நண்பர்களே, இனி நாமும் அவனோடு பாரிஸ் நகருக்குப்போய் அங்கே, துணிவியாபாரி கடையிலிருந்த இச்சிறுபையன் படிப்படியாக மேலந்தஸ்துக்கேறிக் கடைசியில் முதல்மந்திரியாகும் பேரந்தஸ்துக்கு வந்தவிதமெப்படியென்று பார்ப்போம் வாருங்கள்.

---

## IV.

'கோல்பெர்ட்' பாரிஸ் நகர் வந்துசேர்ந்ததும் அங்கே எல்லாம் அவனுக்குப் புதிதாக இருக்கக்கண்டான். அந்நகரின் விஸ்தாரமும், அங்கேயுள்ள கட்டடங்களின் பெருமையும், ஜனங்களின் கூட்டமும், எங்கு பார்த்தாலும் ஐசுவரியமும், அந்தஸ்தும், பெருமையும் நிறைந்து கண்ணுக்குநேர்த்தியாய் விளங்கிய காட்சிகள் அவன் மனதைக்கவர்ந்து அவைகளைப்பற்றி எண்ணுந்தோறும் அவன் சந்தோஷத்தால் தேகம்பரவசமாகும்படி செய்த

ன. அவைகளைக்கண்டு அவன் அடங்காமகிழ்ச்சி யடைந்தானாலும் அவன் தன்வயதுள்ள வாலி பனைப்போல் அச்சந்தோஷத்தில் மூழ்கித் தலை தெரியாது தடுமாறிப் போகவில்லை. அவனைச்சு ற்றியுள்ள சந்தோஷங்களை அவன் அனுபவிக்க வேண்டுமானால் அவனிடத்தில் பிரீதிவைத்த எஜ மானன் அவனுக்கென்று குறிப்பிட்டுவைத்த வே லைகளை ஊக்கமுடன் செய்துவரவேண்டியது அவ சியமென்பதை அவன் மறக்கவில்லை. ஆகையால் அந்தப்புத்திசாலியான பையன் தன்னைச்சுற்றி நடக்கும் எவற்றையும் கண்ணுங் கருத்துமாய்க் கவனித்து வருகையில் 'மெஸ்ஸர்ஸ் சின்னுணி அண்ட் மாஜராணி' என்னும் பணவியாபாரக் கம் பெனியாருடைய 'பாங்கி'யில் ஒரு 'குமஸ்தா' வாகவுள்ள தனது தொழிலைச் சிறிதும் அலக்ஷியம் செய்யாது அவன் செய்யவேண்டிய கடமைகளை யெல்லாம் வெகு நுட்பமாகக் கவனித்துச் செய் துவந்தான். அவன் இப்படி அதிக ஊக்கத்தோ டும் சாமர்த்தியத்தோடும் அதன் வேலைகளையெல் லாம் பார்த்துவந்ததால் வெகு சீக்கிரத்தில் அவன் மதிப்பேறப்பெற்றவனானான். எவ்வளவு சிக்கு முக்கான கணக்குகளும் அவன் பரிசோதனைக்கு த் தப்புகிறதில்லை. தன்னுடைய தொழில் சம் பந்தமான விஷயங்களின் விவரங்களையெல்லாம் அவன் வாலிபதெசையிற்றானே கசடறக்கற்றுத்

தேர்ந்தவனானன். அவனுக்குப் புருஷத்துவம் வந்ததும் அவன் பழுதறக்கற்ற அரசிறைக்கணக்கன் என்று பேர்வாங்கத்தக்கவனானன். அவன் கொள்ளல் கொடுத்தல் முதலிய பணவியாபார விஷயங்களையும் அரசிறைமுதலிய இராச்சிய சம்பந்தமான வரவுசெலவு கணக்கு விவரங்களையும் பழுதறப்பார்க்கும் சக்தியுள்ளவனாகவே, அந்தப் 'பாங்கி'யில் வர வர அதிகப்பொறுப்புள்ள வேலைகளெல்லாம் அவன் பார்த்துவரும்படி ஒப்புவிக்கப்பட்டன. இப்படி வர வர உன்னதஸ்தானத்திற்கு உயர்த்தப்பட்டுக் கடைசியில் அவன் அந்தக் 'கம்பெனி'யின் வியாபாரத்தை விர்த்திசெய்வதற்காக வெளிநாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்துவரும் 'ஏஜெண்டு' ஆக நியமிக்கப்பட்டான். இது மிகவும் பொறுப்புள்ளவேலை. இந்த வேலை தனக்குக் கிடைக்கவேண்டுமென்று அவன் ஆசைப்பட்டுக் கொண்டிருந்தபடி அவன் மனோரதமும் பலித்தது.

சிறுவயதுமுதல் கோல்பேர்ட்டுக்குக் கலைக்கியானங்களிலும் சாஸ்திரங்களிலும் பிரீதியுண்டு. அது இப்பொழுது சுற்றுப் பிரயாணியாக ஏற்பட்டபின் அதிக விர்த்தியடைந்து விளங்கியது. 'பிரான்ஸ்' தேசத்திலுள்ள மாகாணங்களை யெல்லாம் ஒருமுறை அவர் (இனி நாம் அவரை மரியாதையாகப் பேசவேண்டும்) சுற்றுப்பிரயாணம்

செய்துவந்தார். வருகையில் அங்கங்கேயுள்ள தொழில்கள் வித்தைகள் முதலியவற்றை விசாரித்து நோட்டம் செய்துகொண்டு வந்ததோடு வியாபாரத்தை விர்த்திசெய்வது அவர் முக்கியத் தொழிலாக இருந்தமையால் அதற்கேற்ற வழி வகைகளைக் கண்டு பிடித்து வியாபாரம் தழைத்தோங்கச்செய்யச் சூழ்ச்சிசெய்துவந்தார். வியாபாரவிர்த்தியார்த்தம் இந்த யாத்திரைகள் செய்து வருகையிலேதான் அவர் தேசக்ஷேம விர்த்திக்காக அனேக மகத்தான ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று உத்தேசித்தது. இப்பொழுது உத்தேசித்தவைகளையெல்லாம் பிந்தி அவர் முதல்மந்திரியாகவந்தபொழுது செய்வித்து நடத்தியதே அவர் துரைத்தனத்திற்குப் பெருமையும் பூஷணமுமாக இருந்தது. 1648-ம் வருடம் தமக்கு சுமார் 30 வயதாயிருக்கும் பொழுது அவருடைய சமீப பந்துவாகிய 'ஸென் புவேஜ்' என்பவர் அப்பொழுது இராஜாங்க காரியதரிசியாயிருந்த தம்முடைய மைத்துனர் 'லிடெலீர்' என்பவரின்கீழ் 'கோல்பெர்ட் அவர்க'ளுக்கு ஒருவேலை அமர்த்திக்கொடுத்தார். அப்பொழுது 'பிரான்ஸ்' தேசத்துக் காசனுயிருந்த '14-வது லூயி' குழந்தைப் பருவ முடையவராயிருந்தார். அவருடைய இளமைப்பருவத்தில் ஆஸ்திரியாதேசத்து ராணி அன்' என்பவள் அவருக்காக 'பிரான்ஸ்' தேசத்

திற்கு அதிபதியாக இருந்து ஆளுகை நடத்திவந்தாள். அந்த ராணிக்கு முதல்மந்திரியாயிருந்து துரைத்தனத்தை நடத்திவந்தவர் 'கார்டினல் மஜரின்' என்பவர். 'கோல்பெர்ட்' இராஜாங்க காரியதரிசி 'லிடெலீர்' என்பவருக்குள் வேலையிலமர்ந்திருக்கையில் அவரால் 'கார்டினல் மாஜரி' னுக்குப் பரிச்சயம்செய்து வைக்கப்பெற்றார். இந்தச் சமயத்தில் 'அன்' ராணி ஆளுகைநடத்திய காலத்திலுண்டாயிருந்த கக்ஷிப்பிரதிகக்ஷிகள் கபடச்செய்கைகளும் தந்திரோபாயங்களும் செய்து ஒருவரையொருவர் கெடுக்க யத்தனித்ததாலுண்டான கலகமதிகரித்திருந்தது. 'கார்டினல் மாஜரின்', மனுஷருடைய மாதிரியை ஊகித்தறிவதில் மகாவல்லமைசாலி. அவர் 'கோல்பெர்ட்' அதிக கருத்தோடு தன் வேலைகளைப் பார்த்து வருவதையுணர்ந்து அவருடைய உத்தமகுணங்களை ஊகித்தறிந்து அவரை நன்குமதித்து வந்தார். இந்தச் சமயத்தில் 'கோல்பெர்ட்' தனக்கு உற்றவிடத்துதவியாகவிருப்பாரென்று ஊகித்து அவரைத் தனக்குக் கொடுக்கவேண்டுமென்று 'லிடெலீரை'க்கேட்க, அவரும் அதற்கிணங்கினார். 'கார்டினல் மாஜரின்' 'கோல்பெர்ட்டை' ராஜாலோசனைசபையில் ஒருவராகச்சேர்த்து ராஜாங்க விஷயங்கள் நடத்துவதில் அவரை எப்போதும் தனக்குத் துணையாக வைத்துக்கொண்டுவந்தார்.

1649-50 - ம் வருஷங்களில் ஒரு யுத்தம் நேரிட்டது. அந்த யுத்தத்தில் கோல்பெர்ட் அதிக உற்சாகத்தோடு உழைக்கும் சுபாவமுடையவரென்று காட்டினதைக் கண்டுகொண்டு மாஜரின் அவர்பேரில் முழுநம்பிக்கைவைத்து எவ்வித ராஜாங்க ரகசியங்களையும் அவரோடு சொல்லி ஆலோசித்து வந்தார். இத்தருணத்தில் தேசத்தில் உட்பகை மிகுதியால் மாஜரின் பொதுஜன வெறுப்புக்கு ஆளானவராய்த் தலைநகரைவிட்டு நீங்கி 'கொலோன்' பட்டணத்தில் ஒதுங்கியிருக்க நேரிட்டது. அங்கிருந்து அவர் அதிரகசியமாக அன் ராணியோடு கடிதப்போக்குவரவு வைத்துக்கொண்டு தனக்கு வந்த பொல்லாத தெசையைக்கழிக்க வேண்டி வந்தது. அப்பொழுது கோல்பெர்ட் ஒரு பெரிய பிரபுவின் புத்திரியை விவாகஞ் செய்துகொள்ள விருந்தார். அந்த சமயத்தில் மாஜரின் தலைநகரைவிட்டு நீங்கிப்போக நேரிட்டது கண்டு அவரில்லாத சமயத்தில் அவர் வீட்டுக் காரியங்களையெல்லாம் மேன்பார்வை செய்துகொண்டு அவருக்கும் அன் ராணிக்கும் நடந்த இரகசியமான கடிதப் போக்குவரத்துகளுக்கெல்லாம் இவரே காரியகர்த்தராகவிருந்தார். இது மிகவும் நுண்மையாக யோசித்துச் செய்யவேண்டியவேலை. எதிலாவது அற்பப்பிசகு நேரிட்டால் தலைபோகும்படியான பிரமாதம் நேர்ந்துவிடும். அப்

பேர்ப்பட்ட நுண்மையான விஷயங்களையெல்லாம் அதிக புத்தியுக்தியோடும் சமயோசித சாமர்த்திய த்தோடும் எள்முனை பிசகாமல் எல்லாவற்றையுட் இசைவாக நடத்திவந்தார். இந்த ஆபத்து சமய த்திலதான் இவருடைய புத்தியுக்தி விசேஷமும், இவருடைய மனத்தின் குணமும் நன்றாகப பிரகா சித்து விளங்கியது. கார்டினல் மாஜரின் அவரு டைய கஷ்டதெசை நீங்கி மறுபடியும் முன்போல செல்வாக்குப் பெற்றவராய் பிரான்ஸ் தேசத்துக் குத் திரும்பி வந்தபொழுது கோல்பெர்ட் செய்த நன்மைகளையும் அவருடைய நற்குணங்களையும் மதித்து அவர் அவருடைய குடும்பத்தாருக்கு உபகாரமாயிருக்கும்படி செய்தார்.

கோல்பெர்ட்டுக்கு இப்படி அதிகாரமும் ஆதர வு முண்டானபொழுது அவர் அவருடைய தகப் பனை மறக்கவில்லை. அவனை 'பாரன்' என்கி ற பிரபுப்பட்டத்திற்கு உயர்த்தி அவருடைய சக் திக்கு தக்கபடி அவருக்கேற்ற அந்தஸ்துள்ள வேலையில் அவனை அமர்த்திவைத்தார். அவரு டைய தாயாரின் தகப்பனார் ராஜாலோசனை சபை யில் ஒருவராகச் செய்யப்பட்டார். இவர் பின்னு ல் அத்தேசத்து வழியில் சட்டங்களையெல்லாம் தி ரட்டிச் சீர்ப்படுத்தி வைத்தார். அவருடைய சகோதரர் பலருக்கும் அவரவர் திறமைக்குத் தக்க படி பற்பல உத்தியோகங்கள் பண்ணிவைத்தார்.

இப்படியாக ராஜசபையில் பேர்பெற்றுப் பெரிய மனுஷனாக விளங்கிய கோல்பெர்ட் அவருடைய பந்துக்களை மறக்காமல் ஆதரித்தார். அவர்களும் அவருடைய மதிப்புக் கேற்றவர்களாகவே யிருந்தார்கள். கார்டினல் மாஜரின் இவருக்குச்செய்த உபகாரங்களுக்காக இவர் அவரிடத்தில் மிக்க நன்றிபாராட்டிவந்தார். அவரும் இவருடைய குணவிசேஷங்களையும் திறமையையும் நன்குமதித்து அவர் மரணகாலம் வரையில் இவரை ஏற்றிக்கொண்டாடி வந்தார். 'கார்டினல் மாஜரின்' இருக்கும்போதே கோல்பெர்ட் 'மார்குவிஸ்' பட்டத்துக் குயர்த்தப்பெற்று அவர் வசம் ஒப்புவிக்கப்பட்ட வேலைகளையெல்லாம அபூர்வ திறமையோடும் மனசாக்ஷிக்கு ஒப்புதலாயும் செய்துவந்தார். 'கார்டினல் மாஜரின், சாகும்பொழுது அவருடைய அரசனாகிய 14-வது லூயியினிடத்து பின்வருகிறபடி சொன்னதொன்று தெரியவருகிறது. "ஐயனே, எனது பாக்கிய மெல்லாம் உங்களால் வந்தது. அதற்கு ஈடுசெய்ய நான் சக்தியற்றவனானாலும் கோல்பெர்ட்டை உங்களுக்குக் கொடுத்துப்போவதில் என் கடனை ஓரளவு தீர்த்துக்கொள்பவனாக நினைக்கிறேன்." என்றாராம்.

14-வது லூயி அரசன் கோல்பெர்ட்டினுடைய திறமையை மிக மேலாய் நன்குமதித்து 1661-ம் வருஷத்தில் அவனை அரசிறைமந்திரிஸ்தானத்

திற்கு உயர்த்தினர். இந்தக்காலத்தில் பிரான்ஸ் தேசத்திற்கு அயல்தேச வியாபாரமென்பதே கிடையாமலிருந்தது. அப்பொழுது அத்தேசத்திலிருந்த வியாபாரமெல்லாம் அதன் தலைநகருக்கும் மற்ற மாகாணங்களுக்கும் நடந்துவந்த சொற்ப வியாபாரம் தான். அதுவும் அத்தேசத்திலுண்டான விளைபொருள்களில்மட்டும் தான். வேறு வியாபாரத்திற்கு வழியில்லை இப்பொழுது இந்தியா இருக்கிறதுபோல் பிரான்ஸ்தேசம் அப்பொழுது அதன் சொந்தவளமிவ்வளவென்றறியாம அந்தேசத்தார் தொழில்வகையி லுழைப்பதனா லுண்டாகக் கூடிய ஐசுவரிய விர்த்தி யெவ்வளவாகக் கூடுமென்றும் தெரியாமல் தவித்தது. அத்தேசத்திலிருந்த முக்கியமான சாலைகளெல்லாம் செல்லுவதற்குபயோகமற்றுக் கிடந்தன. கோல்பெர்ட் அவைகளையெல்லாம் மராமத்துச்செய்து சீர்திருத்தி, பல்புதியசாலைகளும் போடுவித்தார். அத்தேசத்தினிருபக்கங்களிலும் அதைச் சூழ்ந்துள்ள இரு கடல்களையும் ஒன்றாயிணைத்தா லுபயோகமாயிருக்குமென்று 13-வது லூயி அரசன் ஆண்டகாலத்திலே பிரஸ்தாபிக்கப் பட்டிருந்தது. அவ்விரு கடல்களையும் இணைக்கக் குறுக்கே ஒரு பெரிய கால்வாய் வெட்டி அவ்வேற்பாட்டை இவர் நிறைவேற்றி வைத்தார். அன்றி உள்நாட்டு வியாபாரத்திற்கு உதவியாகவிருக்க ஒரு பெரிய கால்வாயு

ம் வெட்டுவித்து வியாபாரத்தால் நஷ்டம் வரு வோர்க்கு ஈடுகட்டிக் கொடுக்கும் 'இன்ஷியூரென் ஸ்' ஆபீஸ் ஒன்றும் ஏற்படுத்திஞர். இன்னும் அவர் வியாபார சங்கமொன்று ஸ்தாபித்து அதில் தேசத்திலுள்ள மகா சாமர்த்திய வியாபாரிகளெ ல்லாம் சேர்ந்து தேசவளர்ச்சியை விர்த்தி செய்யும் வழிவகைகளைப்பற்றித் தர்க்கித்துப்பேச ஏற்பா டு செய்தார். தன்னுடைய சொந்தயுக்திக்குத்தோ ன்றியதைமட்டும் செய்தால் போதாதென்று ஐரோப்பாவிலுள்ளபலதேச ராஜாங்கங்களுக்கும் கடிதமெழுதி வியாபாரத்தின்பற்பல பிரிவுகளை விர்த்திசெய்ய அவர்கள் என்ன என்ன ஏற்பாடுகள் செய்து வருகிறார்களென்று விசாரித்து விவரந் தெரிந்துகொண்டு அதில் சிரேஷ்டமானதைத் தெரிந்தெடுத்து அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்தார். சாமர்த்தியமான ராஜதந்திரோபாயமொ ன்று செய்து அத்தேசத்தில் பெருஞ்செல்வம் படைத்த பிரபுகுலத்தார் வியாபாரஞ்செய்வது ஈனமென்று எண்ணியிருந்த தப்பெண்ணத்தை மாற்றி, அவர்கள் தங்களுடைய அந்தஸ்திற்குக் குறைவின்றி வியாபாரஞ் செய்யலாமென்று கற் பித்தார். இவருடைய காலத்தில்தான் பிரான்ஸ் தேசத்தார் முதல் முதல் அநேக நாடுகளில் குடி யேற யத்தனித்தது. இந்தியாவோடு வியாபாரம் செய்வதற்காக ஏற்பட்ட வர்த்தகசங்கங்கள் உண்

டானதும் இவர் காலத்திில்தான். சமுத்திரத்தில் செல்வாக்கிருந்தால்தான் வியாபாரம் வளம்பெற்றோங்குமென்பதை யுணர்ந்து, அதுகாறும் கடலில் மேலதிகாரம்பெற்று விளங்கிய இங்கிலீஷ் கப்பற் சைனியங்கள், டட்சு கப்பற் சைனியங்களோடு இவரும் ஒரு கப்பற்சைனியம் உண்டு பண்ணி, அக்காலம் சமுத்திரத்தில் திரிந்துகொண்டு வியாபாரக் கப்பல்களைச் சூறையாடிவந்த கொள்ளைக் கப்பல்களையும் அக்கப்பற்காரர்களையும் பிடித்து அடக்கம் செய்வித்தார். இவருடைய காலத்தில் அனேக கப்பல்கள் கட்டப்பட்டன; அவை கடலில் சென்று வியாபாரம் செய்து வருவதற்கு அனுகூலமான துறைமுகங்கள், அவற்றிற்கு வேண்டிய சாதகங்கள் முதலியன அமைத்து வைத்ததோடு கப்பலோட்டும் வித்தை கற்பிக்கும் பாடசாலைகளும் ஸ்தாபித்தார். பிரான்ஸ் தேசத்தில் சுதேசகைத்தொழிலின்றி அத்தேசத்தார் தங்களுக்கு வேண்டிய வஸ்துக்களை மிதமிஞ்சிய பொருள் கொடுத்து அந்நிய தேசங்களிலிருந்து வரவழைத்து உபயோகித்துவந்தார்கள். அப்படிப்பட்ட வஸ்துக்கள் பிரான்ஸிலே செய்யப்படத் தக்கதாக பல தொழிற்சாலைகள் அமைப்பித்தார். அவற்றில் முக்கியமானது கண்ணாடிசெய்யும் தொழில். கண்ணாடி செய்யும் வேலைச்சாலை முதல்முதல் பிரான்ஸில் ஏற்பட்டது இவ்

ருடைய முயற்சியினாலேதான்.

இவையன்றி இன்னும் எத்தனையோ நன்மைக
ள் செய்வித்தார். வானசாஸ்திரிகள் நோட்டம்
செய்வதற்கு வசதியான சோதிடோப்பரிகையொ
ன்று இவராலேயே கட்டுவிக்கப்பட்டது. அன்றி
ஜனங்கள் சௌக்கியத்திற்காகத் தோட்டங்களெ
ன்ன, சிங்காரவனங்கள் என்ன, சாலையோரங்களி
ல் அழகாய் நட்ட மரவரிசைகளென்ன, கோட்
டை கொத்தளங்களென்ன, 'ஆஸ்பத்திரிக'ளெ
ன்ன, இன்னுமெத்தனையோ தர்ம ஸ்தாபனங்க
ளென்ன இவையெல்லாம் இந்த மகானுடைய மு
யற்சியால் உண்டாய் இன்றைக்கும் அத்தேசத்தி
ல் சிறப்புற்று விளங்குகின்றன. பாரிஸ் நகரில்
இவருடைய முயற்சியால் உண்டுபண்ணப்பட்ட
ஸ்தாபனங்கள், வஸ்துக்கள், ஞாபக சின்னங்கள்
இவைகளைக் காணாமல் கொஞ்சதூரமாவது போக
லாமென்பது துர்லபமென்று அத்தேசத்தைப் பா
ர்த்தறிந்தவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அவர்
செய்த நற்காரியங்கள் அத்தேசத்தில் கண்டகண்
ட விடங்களிலெல்லாம் பலவிதமாக உருவெடுத்து
நின்று அவர் கீர்த்தியை இன்றைக்கும் விளக்கி
வருகின்றன. இந்த மகான் தேச க்ஷேமாபிவிர்
த்தியை நாடிச் சீர்திருத்தம் செய்யாத இலாகா
ஒன்றில்லை. "வரப்புயர நீருயரும், நீருயர நெல்
லுயரும், நெல்லுயரக் குடியுயரும், குடியுய

ரக்கோனுயரும்" என்னும் உண்மை வாக்கியத்தை உன்னி வியவசாய விர்த்திக்கடுத்த அனேக சாதகங்கள் செய்வித்தார். கால்நடைகளை விர்த்திசெய்யவும், சாகுபடிசெய்ய சுலபமாக நிலம் கிடைக்கவும் அனுகூலமான ஏற்பாடுகள் செய்தார்.

இந்தவேலைகளுக்கு மத்தியில் அவர் நாகரீக வித்தையை விர்த்திசெய்ய மறந்துபோகவில்லை. 1666-ம வருஷத்தில் படமெழுதல், சிற்பவேலை செய்யல், சித்திரவித்தை முதலிய பல நாகரீக வித்தைகளை பயிவிர்த்தி செய்வதற்கான கல்விச்சாலைகள் பல ஸ்தாபித்தார். சாஸ்திரப் பயிற்சிக்காக ஏற்பட்ட கல்விச்சாலையும் இன்னும்சிலவும் இவருடைய முயற்சியால் ஸ்தாபிக்கப்பட்டனவே.

இப்படியாக இவர் நெடுங்காலம் நன்மை செய்வதே தொழிலாகக்கொண்டு துரைத்தனம் நடத்தி முதல்மந்திரி ஸ்தானமடைந்து தம் தேசத்திற்கோருபகாரியாய் உலகுக்கோர் ஒளிவிளக்காய்ப் பிரகாசித்து புத்திர மித்திரகளத்திராதிகளோடு சுகஜீவியாய் வாழ்ந்திருந்து 1683ல் செப்டம்பர் 6௳ அவருடைய 64-வது வயதில் அவர் வாழ்நாளை முடித்தார். இவர் தனக்குப்பின் 9-குழந்தைகளை விட்டுப்போனார்: 6-ஆண்பிள்ளைகளும், 3-பெண்பிள்ளைகளும். இவ்வளவு வேலை

நெருக்கத்தில் இவர் பிள்ளைகளை வளர்க்கும் கடமையைச் சிறிதும் அலக்ஷியம் செய்தாரில்லை. பெண்கள் மூவரும் பிரபு குலதிலகர்களை மணம் புரிந்து வாழ்ந்திருந்தார்கள். துணிவியாபாரி கடையில் உதவியாகவிருந்து நாணயமுங் கண்ணியமுமான ஓர்செய்கையால் முதல் முதல் முன்னுக்குவரத் தலைப்பட்ட கீர்த்திபெற்ற கோல்பெர்ட் மகானுடைய சரித்திரம் இவ்வாறு இனிது முடிந்தது. இதைக் கவனமாய் வாசித்து வந்த ஒவ்வொருவரும் இவருடைய சரித்திரத்தைப் படித்த உற்சாகத்தில் தங்கள் வாழ்நாட்களைக் கழிக்க ஒரு நல்ல நியமம் ஏற்படுத்திக்கொண்டு அதை யொட்டி நடந்துவர முயற்சிப்பார்களானால் இச்சரித்திரத்தை யெழுதியவர் பிரயாசையும் வாசித்தவர் சிரமமும வீணேபோகாதென்பது நிச்சயம். "பெருமையும் சிறுமையும் தான் தரவருமே" யென்பதினுண்மை இதில்இனிதுவிளங்கியதையு முணரலாம்.

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலா
தோன்றலிற்றோன்றாமை நன்று."—குறள்.



—விவேக சிந்தாமணி.—

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத்

தமிழ்ப் பத்திரிகை.

"ஸ்திரீகள், புருஷர்கள், பாலர், பெரியோர் அனைவரும் ஆசையுடன் வாசிக்கக்கூடியது."

இது ஒவ்வொரு வீட்டிலும் இன்றியமையா திருக்க வேண்டியது. பிள்ளைகளுக்கும் உபாத்தியாயர்களுக்கும் பேருபகாரமானது.

சந்தா விவரம்.

தாமான காகிதப்பதிப்பு:—அத்தியக்ஷர்கள், ரீடிங் ரூமகள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. வருஷசந்தா குறைந்தது ரூ 5. தனி பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசான காகிதப்பதிப்பு.—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது. வருஷசந்தா ரூ 4. ஆறு மாசத்துக்கு ரூ 2—2. தனிப்பிரதி 5½ அணா; பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே தவறாமல் கட்டினால் வருஷ சந்தாவில 8 அணாவும, 6-மாச சந்தாவில 4 அணாவும தள்ளிக் கொடுக்கப்படும்.

ஏப்ரல் அல்லது மே மாதம் துவங்கியே சந்தா கணக்கு வைக்கப்படும. ரிஜிஸதரான சந்தாதாரர்கள் வருஷ முடிவின்றி மற்றப்படி சந்தாவைநிறுத்துதல்கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தா செலுத்தி வருகிறவர்களுக்கு இரண்டுமாசத் தவணையும், 6-மாசக் கணக்காக ஒழுங்காய்ச் சந்தா செலுத்துகிறவர்களுக்கு மூன்றுவாரத் தவணையும கொடுக்கப்படும. அதற்குள் சந்தாவை முன் பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேறகண்ட தள்ளுபடிசெய்து கொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில நிறுத்தக் கூடாது. நிறுத்த விரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது ஏப்ரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்த வருஷமுழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாதாரர்கள் எப்போதும் ரிஜிஸ்தர் நெம்பரைக்கண்டு கடிதமெழுதவேண்டும்.

## விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்.

இத்தலைப்பின்கீழ், விவேகசிந்தாமணியில் வெளியான விஷயங்களில் முக்கியமானதும், சிரந்தர உபயோகமானதுமான வைகளைத் திரட்டி, தனிப்புஸ்தகங்களாக அச்சிட்டு எல்லாருக்கும் உபயோகமாகும்படி பிரசுரித்துவருகிறோம்.

நல்லமாதிரியாக அச்சிட்டு நேர்த்தியான கட்டடம் செய்துள்ளது.

நோல்பேர்ட் சரித்திரம்: துணி வியாபாரி கடையிலிருந்து முதல் மந்திரிஸ்தானத்துக்கு வந்த ஒரு வாலிபன் கதை. (64 பக்கம்) அழகான காலிகோகட்டம் செய்தது 5 அணா. சாதாரணமாகத் தைத்தது 2 அணா 6 பை. தபாற்செலவு முதலியன பிரத்தியேகம்.

ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம் (430 பக்கம்) நாணயமான இங்கிலீஷ் பயிண்டு செய்து கிலட் எழுத்துகள் பதித்தது. ரூ 1-8-0 தபால் சார்ஜ் 3 அணா V. P. P. மூலமாக ரூபா 1-14 0. தளமானகாகிதத்தில் அச்சிட்டு, அதிக கிலட்கொடுத்து, இனாம்கொடுப்பதற்கும், பள்ளிக்கூடப் பரிசுகளுக்கும் ஏற்றதாயுள்ளது: ரூபா 1-12 0. தபால்செலவு முதலியன பிரத்தியேகம்.

சத்தியதேவதை கதை:—(60 பக்கம்), அழகான காலிகோகட்டடம் செய்தது 5 அணா; சாதாரணமாகத் தைத்தது 2 அணா 6 பை. தபால்செலவு முதலியன பிரத்தியேகம்.

விவேகரஸத்தாலாட்டு, 6பை. தபாற்கூலி பிரத்தியேகம்.

வேண்டுவோர் சென்னை திருவல்லிக்கேணி அ. ப ஏஜன்ஸி காரியதரிசி ஸி. வி. சாமிநாதையர் அவர்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

# THE VIVEKA CHINTAMANI SERIES.

Being a reissue in a separate form of matters of permanent value and interest that has appeared in the Viveka Chintamani

**Printed in large type on good paper**
**in a Handy Form.**

**Neatly got up and Tastefully bound.**

"The get up of the Series is simply excellent and the public can have no idea of the beauty and attractiveness of the volumes before us until they purchase a copy and see it for themselves"—*The Hindu of 16th December*, 1896.

"I hope you will be encouraged similarly to reprint other articles from your extremely useful and popular Magazine, some of which, as for instance, *Kamalambal*, are such as will do honor to a first class Magazine of the kind in Europe".—Professor P. Sundaram Pillay, M A, F.M A., F.R.H.S., M R A S, Rao Bahadhur

**Story of Colbert:** The Draper's apprentice who became Prime minister of France. 64 p p 16 mo Full cloth with ornamental sides, 5 As Merely Stitched 2 As. 6 ps Postage &c Extra

**Kamalambal or the Fatal Rumour,** A Novel in ... of absorbing interest 430 pp 16mo Full cloth, Gilt ..., Ornamental sides Price Rs. **1-8-0.** Postage **3** As by V. P P Rs. 1-14-0.

A special Edition, in Thick Paper, Extra Gilt, Suitable for School Prizes, Presentation, &c., Rs. 1-12-0. Postage&c., Extra

**Fairy Tell True** (A Tale), 60 pp. Full cloth with ornamental sides, **5** As.; Merely stitched **2** As. **6** p. Postage &c Extra.

**Vivekarasattalattu** (A Lullaby) 6 pies. Postage Extra.

**Only a limited number of copies printed.**

*APPLY SHARP,*

**C. V. SWAMINATHA AIYAR,**

*Secretary, D. K. Agency,*

*Triplicane, Madras.*